# சிலம்பிற் பிழையா?

(ம.பொ.சி.க்கு மறுப்பு)



திருக்குறள் மணி

இறைக்குருவனர்



...காடிப் பதிப்பகம் வெளியீடு

# சிலம்பிற் பிழையா?

ஆசிரியர்:

திருக்குறள் மணி

புலவர் இறைக்குருவனார்.



வெளியீடு:

தமிழ்க் கொடி பதிப்பகம்

88, தம்புச்செட்டி தெரு

சென்னை-600 001.

உரிமை : ஆசிரியருக்கு.

முதற்பதிப்பு : (1) 1983 திசம்பர்

வெளியீடு : தமிழ்க்கொடி பதிப்பகம்

விலை : உரு. 4-00

நூல் கிடைக்குமிடம் :-

**தமிழ்க்கொடி பதிப்பகம்**
**88, தம்புச் செட்டி தெரு,**
**சென்னை-600 001.**
தொலைபேசி : 25557.




## BIBLIOGRAPHICAL DATA :

| | | |
|---|---|---|
| Title of the Book: | : | SILAMPIR PIZHAIYAA? |
| Author | : | PULAVAR THIRUKKURALMANI IRAIKKURUVANAAR |
| Language | : | TAMIL-Size of the Book : Crown Octavo |
| Edition | : | FIRST 1983-Copy Right : Author |
| Printing Types Used | : | 10, 12, ,18 Points. |
| No. of Copies Printed | : | 1000—Paper Used : 11-6 Kg, D/Crown |
| Price: | : | Rs. 4-00 |
| Printers | : | THAMIZHOSAI ATCHAGAM, 84, Habibulla Road, Theyagaraya Nagar, Madras - 600 017. |
| Publishers | : | THAMIZHKKODI PATHIPPAGAM |

அச்சிட்டோர் : தமிழோசை அச்சகம், 84, அபிபுல்லா சாலை,
தியாகராய நகர், சென்னை-600 017.

# பதிப்புரை

நூலறிவாளர்களுக்கு என் வணக்கம்!

சிந்தனையாளர்கள் குறைந்து குழப்படியாளர்கள் நிறைந்து வரும் இந்தக் காலக்கட்டத்தில்; புத்தகம் படித்து அறிவுத் தெளிவடைய விரும்பாத இக்காலத் தமிழ் மக்கள் நடுவில் நான் புத்தகம் வெளியிடும் தொழிலை மேற்கொண்டிருப்பதற்கு என்னுள் இருக்கும் தணியாத தமிழ்ப் பற்றும் குன்றாத கொள்கை வெறியுமே காரணம்!

தமிழ் மொழிக்குத் தனிச்சிறப்பளிக்கும் பேரிலக்கிய மான சிலப்பதிகாரம் பற்றித் தமிழாய்ந்த பெருமக்கள்-புலவர்கள் அவரவர்களுக்குரிய அறிவு நிலைகளுக்கு ஏற்பக் கருத்துகளைக் கூறியிருக்கின்றனர்.

சிலர் சிக்கலாகக் கொண்டு மயங்கிப் பிழையாகக் கண்டு காட்டிய பகுதியை நம் அன்பிற்குரிய தமிழறிஞர் திருக்குறள்மணி இறைக்குருவனார் அவர்கள் முறைப்படி ஆராய்ந்து தெளிவுறுத்தியுள்ளார்; தாம் கண்ட உண் மையைத் தக்க சான்றுகளுடன் நிலை நாட்டியுள்ளார். ஆகையினாலே “சிலம்பிற் பிழையா?” என்னும் இந் நூலைத் தங்கள் கைகளில் தவழவிட விரும்பினேன்.

வடிவத்தால் சிறிதாயினும் பொருட் செறிவால் சிறப்பு மிக்க இவ்வாராய்ச்சி நூலை வெளியிட்டுத் தமிழ் மக்களுக்கு இலக்கிய விருந்தளிப்பதில் **தமிழ்க் கொடி** பதிப்பகம் பெருமைப்படுகிறது.

இந்நூலை விலை கொடுத்து வாங்கிப் படிப்பவர்களுக்கு என் நன்றியினை உரித்தாக்குகின்றேன்; இது போன்ற அறிவார்ந்த நூல்களைத் தொடர்ந்து வெளியிட உங் களுடைய ஆதரவையும் ஒத்துழைப்பையும் என்றும் வேண்டுகின்றேன்.

**இசைக்கவி கோட்டைசாமி**
தமிழ்க் கொடி பதிப்பகம்

# ஆசிரியர் முன்னுரை

சிலப்பதிகாரத்தில் 'குறை'யிருப்பதாகவும், அதனை இயற்றிய ஆசிரியர் இளங்கோவடிகளார்க்கு 'மறதி' என்றும் மற்றுச் சிலர் கூறுவது மட்டுமன்றிக் கற்றுத் துறை போகிய நற்றமிழ் வல்லுநர்கள் சிலரும் அதனை மற்றொரு வகையால் சுட்டிக் காட்டுவதும், அவர்தம் கூற்றை மறுக்கப் புகுந்த இன்னுஞ் சிலரும் அதனையே வேறொரு வகையால் வழி மொழிவதுமே 'சிலம்பிற் பிழையா?' என்னும் இவ்வெதிர் நூலை எழுதுமாறு எம்மைத் தூண்டின.

'தென் மொழி'யில் (சுவடி: 15, ஓலை: 6 முதல்) இந்நூற் கட்டுரைகள் இடையீடுபட்டு ஆறு இதழ்களில் வெளிவந்தன. அவற்றைப் படித்த அருந்தமிழ் அன்பர்களும் அறிஞர்களும் பாராட்டி மகிழ்ந்தனர்; நூலாக்க ஊக்கினர். அவர்களுள் சிங்கப்பூர்த் 'தமிழ் முரசு' ஆசிரியர் திரு. சிதம்பரம் அவர்களும் ஆத்தூர்க் கலைக்கல்லூரித் தமிழ்த் துணைப் பேராசிரியர் திரு. சி. மெய்கண்டான் க. மு அவர்களும் குறிப்பிடத் தக்கோர் ஆவர்.

இந்நூலைத் தமது தமிழ்க் கொடி பதிப்பகத்தின் வாயிலாக வெளியிட முன் வந்த கொள்கைப்பற்றும், செந்தமிழ் ஆர்வமும் வாய்ந்த இசைப் பாவலர் கோட்டைச்சாமி அவர்களுக்கும், இதற்கு அணிந்துரை வழங்கிய பேராசிரியர் பைந்தமிழ்ப் பாவலர் திரு. அ. கி. பரந்தாமனார் க. மு. அவர்களுக்கும், தந்துரை வரைந்த பாவலர் திரு. இளம் வழுதி க. மு. அவர்களுக்கும் எமது நன்றி உரித்தாகுக!

116, திரு. வி.க. நெடுஞ்சாலை,
சென்னை -600004
தி.பி. 2014 நளி 23

— இறை.

பேராசிரியர் பைந்தமிழ்ப் பாவலர்

அ.கி. பரந்தாமனுர் க.மு.

அவர்களின்

# அணிந்துரை

நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம் தமிழ் நாட்டு இலக்கிய அமைப்பில் தமிழ் நாட்டுக் கதையை இனிய முறையில் இயற்றப்பட்ட இலக்கியம்.

தமிழ் நாட்டில் வழங்கிய கதையை இலக்கியமாய் இயற்றினுர் இளங்கோவடிகளார் என்கிருர் ஆராய்ச்சிப் பேராசிரியர் வையாபுரியார்.

மேலும் அவர், வரலாற்று நிகழ்ச்சிக் குறிப்பை இணைத்துத் திறம்பட இலக்கியமாய் அமைந்துள்ளதாய்க் குறிப்பிட்டுள்ளார். இதற்கு

எரிமருள் வேங்கைக் கடவுள் காக்கும்
குருகார் கழனியின் இதணத் தாங்கண்
ஏதி லாளன் கவலை கவற்ற}
ஒருமுலை அறுத்த திருமா வுண்ணிக்
கேட்டோர் அனைய ராயினும்
வேட்டோர் அல்லது பிறரின் ஞேரே!

என்னும் நற்றிணை 216 ஆவது பாடலில் வரும்

"ஒரு முலை அறுத்த திருமா வுண்ணி"

என்னும் அடி சான்ருகிறது.

நற்றிணையின் பதிப்பாசிரியர் 'திருமாவுண்ணி' என்னும் தொடரை எடுத்துக் காட்டி இத் தொடர் கண்ணகியைக் குறிப்பிடும் போலும் என்று தெரிவித்துள்ளார்.

இஃது உண்மைக் கதையோ பழங்கதையோ எதுவாயினும் ஆகுக. திறனுசிரியர்கள், கதையில் வரும் நிகழ்ச்சியில் முரண் இருக்குமாயின் எடுத்துக் காட்டுவது ஆங்கில இலக்கியத்தில் காணும் மரபு.

ஆங்கிலத் திறனுசிரியர் சகப்பிரியர் நாடகக்கதைகளுக்கு அவ்வாறு கூறுவது உண்டு.

நம் தமிழ்த் திறனாசிரியர்களோ சிலப்பதிகாரத்திற்குக் குறை கூறினால். எவரும் புண்படார் என்று கருதி, நினைத்ததைக் கூறியுள்ளார்கள்.

திருக்குறள் மணி புலவர் இறைக்குருவனார் அவர்கள் சிலப்பதிகாரத்தை நன்கு ஆராய்ந்து அறிந்து "சிலம்பிற் பிழையா"? என்னும் எதிர் நூலைத் தூய தமிழில், இனிய முறையில் விளக்கமாக இயற்றியுள்ளார்.

ஆசிரியர் முடிவாகக் கூறுவது கீழ்வருமாறு:

> "இதுகாறும் கூறியவாற்றான் கோவலன் பிரிவும் குரவைக் கூத்தும் ஒருநாள் நிகழ்ச்சிகளே என்பதும், கோவலன் வெட்டுண்டதும் கண்ணகி அவனைக்கண்டதும் அன்றேயாம் என்பதும், 'வண்டார் இருங்குஞ்சி' என்னும்பாடலில் இடம் பெற்றுள்ள காலையும் மாலையும் ஒரு நாளினவேயாம் என்பதும், இப் பாட்டிலோ உரையாசிரியர்கள் கூற்றிலோ 'பிழை' இல்லை; இளங்கோவடிகட்கு 'மறதி'யும் இல்லை என்பதும், இது பற்றித் திறனாய்வாளர்கள் கூறுவன பொருத்தமற்றனவாம் என்பதும் கண்டு கொள்க!"

இவ்வாறு திருக்குறள்மணி இறைக்குருவனார் தெளிவுறுத்தியிருப்பது அவருடைய புலமைச் சிறப்பையும் அஞ்சாமையையும் புலப்படுத்துகிறது!

கண்ட உண்மையைச் சொல்லல் பெரும்பாலோருக்கு இல்லாதது குறை. அந்தக் குறை இவ்வாசிரியரிடம் காணாதிருப்பது பாராட்டுக்குரியது!

கருத்து வேறுபாடு, ஆராய்ந்து உண்மை காண்பதற்கு வழியாகும். ஆகவே, இதுபற்றி யாரும் மன வருத்தம் கொள்ள வேண்டுவதில்லை!

வாழ்க இவ்விளந்தமிழ்ப் புலவர்!

'அல்லி நிலையம்'
சென்னை -600007
7-12-1983

அ.கி. பரந்தாமனார்.

# தந்துரை

## [பாவலர் இளம்வழுதி க. மு.]

தன் கணவன் 'கள்வன்' என்று கூறக்கேட்டுப் பொங்கி எழுந்தாள்; அவன் குற்றமற்றவன் என்று மெய்ப்பித்து அவனுக்கு உற்ற களங்கம் துடைத்தாள் கண்ணகி!

'இளங்கோவின் மறதி' என்றும், சிலம்பிற் 'பிழை' என்றும் பிறவாறும் கூறக் கேட்டுச் சீறியெழுந்து மாற்றுக் கருத்துக்களை நூறித் தள்ளி உண்மையின் முகத்தை ஒளிபெறக் காட்டுகிறார் ஆசிரியர் புலவர் இறைக்குருவனார்!

ஆராய்ச்சியில் ஈடுபடுங்கால் மறைமலையடிகளாரா? ம.பொ.சி.யா? மற்றொருவரா என்று நோக்காது உண்மை கண்டு உணர்த்துவதில் திண்மையாக விளங்கும் இறைக் குருவனார் தூயதொரு துலாக்கோல்தான் என்பதை நான் உணர்ந்தேன்!

மாற்றுக் கருத்துக்களையும் மற்றைய செய்திகளையும் எடுத்துக் கூறும் தோற்றுவாய்ச் சிறப்பு;

காலக் குறுக்கம் – நாடக அறம் என்றும் பிறவாறும் கூறப்படுவனவற்றை ஆராய்ந்து வழிவிலக்கிக் கொண்டு தம் இலக்கு நோக்கிப் படிப்படியே மேற்செல்லும் பாங்கு;

நிகழ்ச்சிகளை நிரல்படத் தொகுத்துரைக்கும் முறை;

தான் எடுத்து மொழியும் கருத்துகளைத் தெளிவுற விளக்கிப் பிறர் எதிர்த்து மொழியும் கூற்றுகளை அடுக் கடுக்கான சான்றுகளோடு மறுத்துரைக்கும் மாட்சி;

பலதலை வினக்களை எழுப்பிப் படிப்பவர் சிந்தனையைத் தூண்டும் திறன்;

பட்டுக் கத்தறித்தாற் போல் தம் முடிபைத் திட்டவட்டமாகக் கூறும் தெளிவார்ந்த திட்பம்;

ஆகியவை ஆசிரியரின் புலமை உழைப்பை உணர்த்தி என் விழிப்புருவத்தை வில்லாக்குகின்றன!

ஆசிரியரின் பாநடைச் சிறப்பை 'வயிர மூக்குத்தி' வழியுணர்ந்த எனக்கு இந் நூலில் அமைந்து விளங்கும் செம்மாந்த வீறுமிகு உரைநடை விம்மிதத்தை அளிக்கின்றது!

முடிவாக ஒன்று:

இஃது ஓர் எடுத்துக்காட்டு நூல்! யாங்ஙனம்?

* இலக்கியத்தைப் பயில்வதற்கு!
* அணுகி நுணுகி ஆய்ந்து தோய்ந்து தேர்ந்து தெளியும் புலமை பெறுதற்கு!
* மாற்றுக் கருத்துக்களைத் திறம்பட மறுத்தற்கு!
* தம் கருத்தை நிலை நாட்டுதற்கு!

சென்னை-4
9-12-1983

வை. இளம்வழுதி.



# தோற்றுவாய்

முத்தமிழ்த் துறைகளை முற்ற உணர்ந்து வளங்கெழு புலமைசால் இளங்கோவடிகளார் ஆக்கியருளிய அளப்பரும் பெருமைச் சிலப்பதிகாரத்தின்கண் காலமுரண் அமைந்திருப்பதாக அறிஞர்கள் சிலர் எடுத்துக் காட்டுகின்றனர். ஆதலின் அது பற்றிய ஆராய்ச்சி ஈண்டு எடுத்துக் கொள்ளப்பட்டது.

அரும்பெறன் மனைவியை ஆயர் சேரியில் விட்டுப் பிரிந்து, அவள்தன் சீறடிச் சிலம்பு கொண்டு மாறிவரச் சென்ற கோவலன் களவுக் குற்றஞ் சாற்றப்பெற்று வெட்டுண்டு கிடந்ததும், அச் செய்தியறிந்த கண்ணகி கொலைக்களஞ் சென்று அவனைக் கண்டதும் ஆகிய நிகழ்ச்சிகள் கதை அமைப்பின்படி ஒரு நாளில் நடந்தன அல்லவென்றும்,

இருநாள் நிகழ்ச்சியாம் என்றும்,

கொலைக்களத்தே வெள்வாள் விலங்கூடறுப்ப வீழ்ந்து கிடந்த கொழுநனைக் கண்டு குமுறியழுகின்ற கண்ணகியின் கொடுந்துயர நிலையைக் கூறுகின்ற ஆசிரியர் இளங்கோவடிகளார்'

"வண்டார் இருங்குஞ்சி மாலைதன்வார்குழன்மேற்
கொண்டாள் தழீஇக் கொழுநன்பாற் காலைவாய்ப்
புண்டாழ் குருதிப் புறஞ்சோர மாலைவாய்க்
கண்டாள் அவன்றன்னைக் காணக் கடுந்துயரம்" 1

என்னும் பகுதியில் காலே மாலே என்பன நிரலே ஒரு நாளின் முற்பகற்பொழுதையும்முன்னிராப் பொழுதையும் குறிப்பனவாகப் பொருள் கொள்ளும்படி அமைத் திருப்பது வழுவாம் என்று கூறுகின்றனர் சிலர்.

அவர்தம் கூற்றை உடன்பட்டு வழுவமைதி காணு கின்றனர் மற்றுஞ் சிலர்.

அதனே ஒருவாறு வழிமொழியினும் வழுவெனக் கொள்ளமாட்டாது வெவ்வேறு விளக்கங்கள் தீட்டு கின்றனர் வேறு சிலர்.

சிலப்பதிகாரத்தைத் தெலுங்கில் மொழிபெயர்த்து வெளியிட்ட பூதலப்பட்டுப் பாவலர் திரு. சீராமலு அவர்களே இதனைப் பிழையாகச் சுட்டிக் காட்டியவர் என்பதும், அதனை இழையாகத் தொடுத்துச் 'சிலம்பிற் சிறு பிழை' என்னும் நூலாகக் கட்டியுரைத்தவர் பன்மொழிப் புலவர் திரு. மு. கு. சகநாதனர் அவர்கள் என்பதும் அந் நூலால் அறியக் கிடக்கின்றன. [2]

எத்தகைய பேரறிஞராயினும் பெரும் பாவலராயினும் "செய்த தவறு தவறே" என்று கொக்கரிக்கின்றார் மேற்படி சிறுபிழையாளர்.

சிலம்புச் செல்வர் திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள் மேற்கூறியவாறு பிழையாகவே கொண்டு "இளங்கோ வின்மறதி" என்னுங் கட்டுரையில் விரித்தெழுதி நாட்டு கின்றார்; ஆனைக்கும் அடிசறுக்கும் என்று அமைதி காட்டு கின்றார். [3]

மதுரைப் பல்கலைக் கழக மேனாள் துணைவேந்தர் முனைவர் திரு. வ. சுப. மாணிக்கம் அவர்கள் மேற்படி பிழைக்கு ஒருவாறு உடன்பட்டுள்ளார். [4]

ஆயினும் அதனைப் பிழை என்று ஒப்புக்கொள்ளாது கவர்ச்சியின் பொருட்டுச் செய்யப்பட்ட காலக்குறுக்கம் என்றும், அவ்வாறு செய்வது நாடக அறம் என்றும் தீட்டு கின்றார்; பிழைக்கு வேறு பெயர் சூட்டுகின்றார்.

காலக்குறுக்கம் பற்றியதாகச் சிலப்பதிகாரத்தில் இன்னொன்றனையும் அவர் எடுத்துக் காட்டுகின்றார்.

திரு. ஆப்பிரகாம் அருளப்பர் அவர்கள் இது புதிருமன்று பிழையுமன்று, என்று தொடங்கிக் காலை மாலை என்பன முதல்நாட்காலை, மறுநாள் மாலை எனப் பொருள் கொள்ளற் பாலன எனச் சிலம்பிற் சிறுபிழை யுடையார் ஏரண முறையில் எடுத்துக்காட்டி மறுத்த தொன்றனையே தம் புதுக்கருத்துப் போலப் புகன்று, வேறு சிலவும் கூறி வழுக்கிச் செல்கின்றார். [5]

நெல்லைத் திரு. சி. சு. மணி அவர்கள் இச் சிக்கலை அணுகி ஆய்ந்து முடிவு காண முற்பட்டுள்ளார். [6]

இளங்கோவடிகள் கால அமைதி தெளிவுற விளங்கும் வண்ணம் நுணுக்கமாக எழுதிச் செல்கின்றார் என்று உரைத்து, அதற்குப் பற்பல சான்றுகளை அடுக்கிக் கூறு கின்றார்.

ஆயினும் மேலே பிழையாகச் சுட்டியதனை ஏற்றுக் கொண்டு முனைவர். வ. சுப. மாணிக்கம் அவர்கள் கூற்றை ஒருவாறு வழிமொழிந்து "வண்டார் இருங்குஞ்சி" என்னும்பாடற் பகுதி வரிகள் 'அவலத்தின் ஆழத்தை, அது வந்த வேகத்தை - விரைவைத் தருகின்றனவே அல்லாமல் கதைப் போக்கை நிரலே சொல்லுவனவல்ல' என்று குறிப்பிடுகின்றார்.

இதுகாறும் எடுத்துக் காட்டியவற்றால் திருவாளர்கள் சீராமலு முதல் சி. சு. மணி ஈறான யாவரும் சிக்கலை அணுகும் முறையானும், தம் உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்தும் உரையானும் வேறு பாடுடையரே யாயினும், இளங்கோவடிகள் இரு நாள் நிகழ்ச்சிகளை ஒருநாளனவாக அல்லது ஒரு நாளன போலக் குறிப் பிடுகிறார் என்னும் அடிப்படையில் ஒத்த கருத்தினரே

அன்றித் தமக்குள் மாறுபாடு உடையரல்லர் என்பது நன்கு தெளியப்படும்.

சிலப்பதிகாரத்திற்கு உரை வகுத்த முன்னை உரையாசிரியர்களான அருஞ்சொல்லுரைகாரர், அடியார்க்கு நல்லார் ஆகியோரும், பின்னை உரைகாரர்களான நாவலர் திரு. ந. மு. வேங்கடசாமி, பெருமழைப்புலவர் திரு. பொ. வே. சோமசுந்தரனுர் முதலியோரும் மேற் கூறிய சிக்கலுக்கு அடிப்படையான நிகழ்ச்சிகள் ஒரு நாளில் நடந்தனவாகவே கொண்டு இயல்பாக எழுதிச் சென்றுள்ளனர்.

சிலப்பதிகாரம் பற்றிப் பல்வேறு வடிவில் நூல்கள் வரைந்த திருவாளர்கள் ஔவை. சு. துரைச்சாமி, முனைவர் மு. வரதராசனுர், முனைவர் ந. சஞ்சீவி, பாவோகி சுத்தானந்த பாரதியார், முனைவர் இரா. பி. சேது முதலியவர்களான பலரும்,மற்றும் பேராசிரியர் திரு. துரையரங்கனுர் அவர்களும், பதிப்பாசிரியர் முனைவர் உ. வே. சா. அவர்க்ளும் இக் கருத்தினரே.

ஆனுல் இச் சிக்கலைத் தாமாக எழுப்பிக் கொண்டோ, அஃது எழுந்த பின்னரோ தருக்க முறைப்படி மறுத்தெழுதித் தம் கருத்தை நிறுவினுரல்லர்.

மதுரைப் பல்கலைக் கழக மேனுள் துணை வேந்தரும், பன்மொழிப் புலவருமான முனைவர் திரு. தெ. பொ. மீனுட்சி சுந்தரனுர் அவர்கள் மேற்சுட்டிய சிலம்பிற் சிறுபிழை என்னும் நூலுக்குத் தாமெழுதியுள்ள அணிந்துரையில்,

“வண்டார் இருங்குஞ்சி” என்னும் பாடலை ஆக்கியோன் கூற்ருகக் கொள்ளாது நாடக மாந்தர் கூற்ருகக் கொள்ள வேண்டும் என்றும், அப்பாடல் ஒரு புதிரென்றும், இலக்கியத்தை வரலாற்று நூலோ நாட்குறிப்பேடோ எனக் கொண்டு விளக்கும் போது இடர்ப்பாடுகள் எழுகின்றன என்றும், புலவர்களும் காலமும் பற்றி மேலை

நாட்டினரும் பரக்க ஆராய்ந்து வருகின்றனர் என்றும் பிறவாறும் கூறி 'இலக்கிய நயம் உணராதார் பேச்சாகவே இந்தக் கணக்குகள் முடிகின்றன' [7] என்று திருவாய்மலர்ந்துள்ளார்கள்.

ஆ! என்னே அவர்தம் இலக்கிய நயமுணரும் நுண்ணுணர்வு இருந்தவாறு! இது கிடக்க!

இனி, வடநூற் கடலை நிலைகண்டுணர்ந்த நிறைபுலவேந்தர் மறைமலையடிகளார் வடமொழியில் சிறந்து விளங்கும் காளிதாசரின் சாகுந்தல நாடகத்தைப் பகைவரும் பாராட்டும் வண்ணம் தெள்ளிய தமிழ் நடையில் மொழி பெயர்த்து வெளியிட்டதுடன், அதற்கு மிக நுண்ணிய ஆராய்ச்சி நூல் ஒன்றையும் ஆக்கி வழங்கியுள்ளார்கள்.

காளிதாசரின் புலமை நலங்களையும், சாகுந்தலத்தின் மாட்சியையும் பலபடப் புனைந்துரைக்கும் அடிகளார், அதன்கண் தாம் காணும் குறைபாடுகள் சிலவற்றையும் சுட்டிக்காட்டுகின்றார்கள். [8]

விளக்கவுரைப் பகுதியில் (நான்காம் வகுப்பு) காலமுரண் ஒன்று அவர்களால் எடுத்துக் காட்டப்படுகின்றது:

> "அத்தினபுரம் என்பது இப்போதுள்ள தில்லி நகருக்கு வடகிழக்கே ஐம்பத்தாறு கல்லில் உள்ளது; பரதவேந்தன் வழிவந்தோனான அத்தினன் என்பவனால் உண்டாக்கப்பட்டது. கங்கை யாற்றில் வந்து கலக்கும் ஒரு கிளையாற்றங்கரை மருங்கே உள்ளது.
>
> துசியந்த வேந்தன் மகனான பரதன் காலத்திற்குப் பின்னர் உண்டாகிய இந்நகரை துசியந்தன் காலத்தில் அவற்குரிய தலைநகராகக் காளிதாசர் கூறியது கால முரண் ஆகும்."

அடிகளார் அச்சிட்டு வெளிப்படுத்தாது கையெழுத்துப் படியாக வைத்திருந்த 'அம்பிகாபதி அமராவதி' என்னும் நாடகம் அடிகளார்தம் மறைவிற்குப் பின்னர் அவர்களுடைய அணுக்கத் தொண்டர் திரு. கனகராயர் அவர்களால் பதிப்பித்து வெளியிடப் பட்டுள்ளது.

அந் நாடகத்து இரண்டாம் நிகழ்ச்சியின் முதற் காட்சியில் கம்பரின் மகனுன அம்பிகாபதி அவைக் களத்தே ஆற்றும் உரையின் ஒரு பகுதி [9] வருமாறு:

> "இனிக் கடவுளும் உயிரும் உண்டோ இல்லையோ என்னும் ஆராய்ச்சியில் நாம் இப்போது நுழைய வேண்டுவதில்லை,
>
> நம் பெருமான் மெய்கண்ட தேவர் தாம் அருளிச் செய்திருக்கும் சிவஞான போதத்தில் கடவுள் உயிர் உலகம் அல்லது பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களையும் பற்றி ஆராய்ந்துரைக்க வேண்டுவனவெல்லாம் முற்ற ஆராய்ந்து அவற்றின் உண்மையை முடித்துக் கூறியிருக்கின்றார்."

கம்பர்—அம்பிகாபதி காலம் கி.பி. பன்னிரண்டாம் நூற்றுண்டென்பதும், மெய்கண்டார் காலம் பதினுன்காம் நூற்றுண்டென்பதும் வரலாற்றுசிரியர் வரையறுத்த கொள்கை.

கம்பர் காலத்தை முற்படுத்துரைப்பார் சிலர் உளரேனும், பிற்படுத்துரைப்பார் அரியர்.

எவ்வாறுயினும் கம்பர் காலத்திற்குப் பிற்பட்டவர் மெய்கண்டார் என்பது ஒருதலை.

இவ்வாறிருப்ப, மெய்கண்டாரையும் அவர்தம் மெய்ந்நூலையும் குறிப்பிட்டு மேற்கோள் காட்டி அம்பி

காபதி உரையாற்றுவதாக அடிகளார் அமைத்திருப்பது அவர்கள் சாகுந்தலத்தில் எடுத்துக் காட்டியது போல்வ தொரு கால முரணேயாம்.

அடிகளார் தாமே அம்பிகாபதி அமராவதியை அச்சிட்டு வெளிப்படுத்தியிருப்பின் இப் பிழை களையப்பட்பட்டிருக்கும் என்று உறுதியாக நம்பலாம். ஆயினும் அடிகளார் பெயரில் வெளிவந்துலாவும் ஒரு நூலில் இப் பிழை இடம் பெற்றிருப்பது வருந்துதற்குரியதேயாம்.

உலக வியற்கை மக்களியற்கைகளை உற்று நோக்கின் ஈண்டு எத்துணை ஒள்ளியராயினும் அவரெல்லாம் எவ்வாற்றானும் மெய்யுணர்வின் மேம்பட்டு அறியாமை அறவொழிந்த திறவோரெனத் தெளிந்துரைத்தற்கு உரியார் அல்லர்.

குற்றங் குறைகள் முற்றுந் தொலைந்த பெற்றியார் என்று துணியத்தக்காரும் உளர்கொல்!

அங்ஙனம் அளந்துரைக்கும் ஆற்றலுடையார் தாம் யாவர்?

உயிர்களெல்லாம் குறைபாடு உடையன என்பது எத்துணை உண்மை!

இது பற்றியன்றே,

> ''அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கால்
> இன்மை யரிதே வெளிறு'' 10

என்னும் பெருநாவலரின் திருவாய் மொழியும், எழுந்தது!

நம்மனோர் அறிவின் திறத்தை ஒருவாறு படிநிலைப் படுத்த முடியுமே யன்றி ஒரு தலையாக முடிநிலைப் படுத்த முடியாது.

பல்லாற்றானும் ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர் பால் ஒரோவழி நிகழுங் களங்கம், காரிருள்

கிழித்துக் கதிரொளி பரப்பும் மதிக்கண் திகழும் மருப் போல்வதேயாம்.

அதனல் அவர்தம் பேரொளி எவ்வாற்ருனும் இழுக் குப்படுவதன்று; எவரானும் இழிக்கப்படுவதும் அன்று.

ஆசிரியர் இளங்கோவடிகள் வகுத்த சிலப்பதிகாரம் ஒரு சாரார் சுட்டிக் காட்டுமாறு போலக் குற்றமுடை யதே யாயினும் அது பற்றி அடிகட்கோ சிலம்புக்கோ ஒரு சிறிதும் இழிவு நேரமாட்டாது. இது நிற்க!

'சிலம்பிற் சிறுபிழை' சகநாதனர் வையாபுரியின் வழி நின்று அயன்மொழி நாகரிகக் கலப்பின் பெருமையும், இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தின் சிறுமையும் பற்றி யும் இன்னேரன்ன பிறவற்றைப் பற்றியும் வாய் நீட்டு கின்ருர். [11]

மற்றும் இப் 'பிழை' முடிபைத் தம் புதுக் கண்டு பிடிப்பாகக் கூறும் ம. பொ. சிவஞானத்தின் செயல் கரவடமான தென்றும் கரைகின்ருர். [12]

அவையெல்லாம் ஈண்டைய ஆராய்ச்சிக்குப் பெரி துந் தொடர்புடையன அல்லாமையின் அவற்றைப் புறந் தள்ளி மேற்செல்வாம்!



# காலக்குறுக்கம்

முதற்கண் முனைவர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் தம் கருத்தையொட்டிச் சிலப்பதிகாரத்தினின்றும் எடுத்துக் காட்டும் பிறிதொரு செய்தியை முறையுற ஆய்ந்து தீர்வு செய்துகொள்வது நன்று.

மாணிக்கம் அவர்களின் கூற்று வருமாறு: [13]

"கோவலன் செவ்வாய்க்கிழமை காலை கண்ணகியைப் பிரிந்து சென்றான் என்று வைத்துக் கொண்டால், பகற்பொழுதைக்குள் கொலைப்படுகின்றான். புதன் கிழமை மாலை கண்ணகி வெட்டுண்ட கோவலனைக் காண்கிறாள். அன்றிரவே தேவிக்குத் தீக்கனா ஏற்படுகின்றது. வியாழக்கிழமை மாலை பாண்டியன் முன் கண்ணகி தோன்றி வழக்குரைத்து வெல்கின்றாள், பாண்டியன் தேவியொடு அப்போதே உயிர் விடுகின்றான். இக் காலத் தெளிவோடு பின்வரும் அதனைக் காண்போம்.

"கோவேந்தன் தேவி கொடுவினை யாட்டியேன்
யாவும் தெரியா இயல்பினேன் ஆயினும்
முற்பகற் செய்தான் பிறன்கேடு தன்கேடு
பிற்பகற் காண்குறூஉம் பெற்றியகாண்"

இது கோப்பெருந்தேவி முன் கண்ணகி கூற்று. ஒரு நாள் முற்பகலில் பிறனுக்குக் கேடு செய்தவன் அதே நாள் பிற்பகலில் தான்

கேடடைவான் என்று தன் கணவனை அழித்த பாண்டியன் உடனே அழிந்தது பற்றி மகிழ்கின்ருள் பத்தினி. இருநாள் ஈங்கும் குறைவு படுதலைக் காண்கிறேம். ஊழ்வினை மிகவிரைந்து வந்து வினைசெய்தானைத் தாக்கும் என்றகருத்தை வலியுறுத்தும் பொருட்டு நாடகம் இருநாளைப் பலி கொண்டது.''

கண்ணகியைக் கோவலன் பிரிந்து சென்றது செவ்வாய்க் கிழமையுமன்று; கண்ணகி பாண்டியன் முன் தோன்றி வழக்குரைத்தது வியாழக்கிழமையுமன்று.

உறுதியாகக் கூருமல், 'வைத்துக் கொண்டால்' என்று அவர் வழுக்கிச் செல்கின்றமையானும், இச் செய்தி பின்னர் விரிவாக ஆராயப்பட இருக்கின்றமையானும் ஈண்டு அதனை விடுத்து, மேற்காணும் பகுதியில் அவர் குறிப்பிடும் காலக் காவு பற்றிக் காண்போம்.

## முற்பகலும் பிற்பகலும்

பாண்டிய வேந்தன் மாண்டதன் பின்னர் அவனெடு துஞ்சிய கோப்பெருந்தேவியை நோக்கிக் கண்ணகி கூறுவதாக அமைந்துள்ள மேற்காட்டிய பாடற்பகுதியுள் முன்னர்க் கோவலனைக் கொன்ற பாண்டியன் பின்னர்த் தானே மாய்ந்தொழிந்தான் என்பதனை,

''முற்பகற் செய்தான் பிறன்கேடு தன்கேடு
பிற்பகற் காண்குறூஉம் பெற்றியகாண்''

என்னும் அடிகளால் கண்ணகி சுட்டிக் காட்டுகின்ருள்.

முனைவர் வ. சுப. மாணிக்கம் அவர்கள்தம் கணக்குப்படி செவ்வாய்க்கிழமை பிற்பகலில் கோவலனுக்குக் கேடு செய்த பாண்டியன் வியாழக்கிழமை மாலை தான் கேடடைகிருன்:

ஆதலின், பிறனுக்குக் கேடு செய்த ஒருவன் இருநாள் கழித்துக் கேடுறுவான் என்னுது ஒருநாள் முற்பகலில் பிறனுக்குக் கேடு செய்தவன் அற்றைப் பிற்பகலே கேடடைவான் என்று பொருள் கொள்ளுமாறு மேற் காட்டிய அடிகளால் கண்ணகி கூறுகின்றமையால் நாடகம் இருநாளைக் காவு கொண்டதாகக் கூறு கின்றுர்.

> "பிறர்க்கின்னு முற்பகற் செய்யின் தமக்கின்னு
> பிற்பகற் ருமே வரும்"

என்னும் பொய்யா மொழியும்,

> "நெடியது காண்கிலாய் நீயெளியை நெஞ்சே
> கொடியது கூறிஞய் மன்ற—அடியுளே
> முற்பகற் கண்டான் பிறன்கேடு தன்கேடு
> பிற்பகற் கண்டு விடும்"

என்னும் முன்றுறையரையனுரின் பழமொழியும்,

> "முற்பகற் செய்யின் பிற்பகல் விளையும்"

என்னும் முதுமொழியும் தமிழறிஞர் யாவர்க்கும் தெரிந் தனவே.

முற்பகல் பிற்பகல் என்பன இயல்பாக ஒரு பகலின் முற்பகுதியையும் பிற்பகுதியையும் குறிப்பனவாயினும், ஈண்டெடுத்துக் காட்டப்பட்டவற்றுள் முற்பகல் பிற்பகல் என்பன முன்பு பின்பு என்னும் பொருளவாகக் கொள்ளற் பாலனவேயன்றி ஒரு பகலின் முன்னேரம் பின்னேரம் என்று கொள்ளற்பாலன அல்ல.

முற்பகலில் மற்ருெருவனுக்குக் கேடு செய்தவன் ஒருவன் அற்றைப் பிற்பகலில் தான் கேடுருது இருப் பானுயின் அதுபற்றித் திருவள்ளுவர் முதலாயினுர் பொய்த்தனர் எனின் பொருந்துமோ?

'நேற்று நீ துன்பப்படும்போது ஓடிவந்து உதவி செய்தானே இன்று நீ அதை நினைத்துப் பார்க்க வேண்டாமா?'

'அவர்களுக்கென்ன, இன்றைக்கு அடித்துக் கொள்வார்கள் நாளைக்குக் கூடிக்கொள்வார்கள்.'

என்பன போலும் உலக வழக்குகளை உன்னிப் பார்மின்!

இவற்றுள் நேற்று இன்று நாளை என்பனவெல்லாம் உண்மையில் அவ்வவற்றின் பொருளைக் குறியாது இறந்த காலம் நிகழ்காலம் எதிர்காலம் என்னும் அளவிலேயே பொருள்தரக் காணுகின்றனம் அல்லமோ?

அவ்வாறாயின் முன்பு பின்பு என்றாயினும் அப் பொருளை நேரடியாகத்தரும் வேறு சொற்களால் ஆயினும் கூறாது முற்பகல் பிற்பகல் என்று கூறி வைத்து, முன்பு பின்பு என்று கொள்ளுக என்று கூறுவது எற்றுக்கு எனின், அவ்வாறு கூறுவது உறுதிப்பாட்டைக் காட்ட வந்த விரைவுக் குறிப்புப் பற்றி யென்க!

விரைவுக் குறிப்பு விரைவைக் காட்டுமே யல்லாது உறுதிப்பாட்டையும் காட்டுமென்றல் என்னை எனின் கூறுதும். ஒருவனிடத்து ஒரு செயலை ஒப்படைக்கக் கருதும் மற்றொருவன், அவன் கடைக்கொட்கச் செய்வானோ மாட்டானோ என ஐயுற்று "நீ இதனைச் செம்மையாகச் செய்து முடித்து விடுவாயா?" என்று வினவிய வழி "இன்னும் பத்தே நாளில் முடித்துத் தருகிறேன்" என்று வீரமாக விடையிறுக்கக் காண்டும்!

'எப்பொழுது செய்து முடிப்பாய்' என்று அவன் வினவாதிருக்கையிலும் அவன் 'பத்தே நாளில்' என்று விடை கூறியது எற்றுக்கு? உறுதிப்பாட்டைக் காட்டும் பொருட்டேயன்றோ?

வினை, அதன் அளவு தகுதிக்கேற்பத் தன்பயனை உரிய காலத்தில் விளைக்குமேயன்றி, விரைந்து விளைக்க மாட்டாது. அங்ஙனம் விளைக்குமெனின் அது வினையின் இலக்கணத் திற்கே முரணும்.

ஆகவே ஊழ்வினை விரைந்து வந்து பயன் விளைக்கு மெனின் அது வினை செய்தான் அதன் பயனைத் தவறாது நுகர்ந்தே தீரல் வேண்டும் என்னும் அடிப்படை உண் மையை வலியுறுத்தும் பொருட்டுக் கூறப்பட்டதாகவே கொள்ளல் வேண்டும்.

கொள்ளவே, விரைவுக்குறிப்பு உறுதிப்பாட்டைக் காட்டும் என்பது துணியப்படும். இது நிற்க!

''முற்பகல் செய்தான் பிறன்கேடு தன்கேடு
பிற்பகல் காண்குறூஉம் பெற்றியகாண்''

என்று கண்ணகியின் வாய் மொழியாக இளங்கோவடிகள் எடுத்துரைப்பது

''பிறர்க்கின்னா முற்பகற் செய்யின் தமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்''

என்னுந் திருக்குறட் கருத்தை உள்ளீடாகக் கொண்ட தேயாம்.

தொல்லை வழக்குப் பற்றிய இதனை எடுத்துக்காட்டி, நாடகம் இருநாளைக் காவு கொண்டதாக மாணிக்கம் அவர்கள் கூறுவது வலியற்றது ஆகலின், அஃது அவர் கருத்தை வலியுறுத்துமாறு யாங்ஙனம் என விடுக்க!

000

# நிகழ்ச்சித் தொகுப்பு

மேற்குறித்த சிக்கலுக்கு நிலைக்களமாகவும் முன்னும் பின்னுந் தொடர்புற்றும் அமைந்துள்ள கதை நிகழ்ச்சிகளையும், அவற்றை நூலாசிரியர் நுவன்று செல்லும் திறத்தையும், சிற்சிலர் சிக்கலாகக் கொண்டு மயங்கியவற்றையும் தெளிவுறத் தெரிந்து கொள்ளுதல் வழுவற முடிபு காண்டற்கு இன்றியமையாததாகும்.

முதற்கண் மதுரைக் காண்டத்துப் புறஞ்சேரியிறுத்த காதை' முதல் 'கட்டுரை காதை' ஈறுன பதினொரு காதைகளின்கண் படர்ந்து கிடக்குங் கதை நிகழ்ச்சிகளை ஈண்டைக்கு வேண்டுமளவை இயைபுறத் தொகுத்துரைப்பாம்.

கோவலனும் அவன்றன் வாழ்க்கைத் துணைவியும் அவர்தமக்கு வழித்துணையாக வந்த கவுந்தியடிகளும் பாண்டிய நாட்டிற் செலவு மேற்கொண்டது வெப்பம் மிகுந்த முதுவேனிற் பருவமாதலின், அதுகாறும் பகற்பொழுதில் வழி நடந்து இராப்பொழுதில் ஓய்வு கொண்டு, நாளும் காவதமல்லது கடவாராகி ஆங்காங்குப் பன்னாள் தங்கிச் சென்று கொண்டிருந்த அவர்கள் ஐயை கோட்டம் நீங்கிய பின்னர், இரவிடைக் கழிதற்கு ஏதமில்லை எனக்கருதிப் பகற்பொழுதில் ஓய்வு கொண்டு இரவின்கண் நிலவொளியிற் செலவு செய்தனர்.

## செவ்வாய்க்கிழமை

கடக(ஆடி)த் திங்கள் இருட்பக்கத்து - தேய்பிறை ஐந்தாம் நாள் செவ்வாய்க்கிழமை இரவும், மேற்கூறி யாங்கு வழிநடந்து வந்த அம் மூவரும் கடைக்கங்குற் பொழுதில், தவமுனிவோர் வைகும் தாழ்பொழில் வாய்ந்த மதுரை மூதூர்ப் புறஞ்சேரியை அடைந்தனர்.

வழிநடைச் சோர்வினுல் அவ் வைகறை யாமத்தே சற்றுக் கண்ணயர்ந்த கோவலன், பின்னிலவுக் கால மாயினும் கன்னியிருள் செறிந்த அச்சிறு பொழுதில் ஒரு கொடிய கனவு கண்டனன்.

## அறிவன் கிழமை

அறிவன் கிழமையன்று காலையில், கோவலன் கண்ணகியையும் கவுந்தியடிகளையும் அப் புறஞ்சேரிப் பொழிலகத்தே தங்குவித்துத், தான் எண்ணி வந்த வணிக முயற்சியின் பொருட்டு மதுரை வாழ் பெருவணிகர்க்குத் தன் வருகைநிலை உணர்த்தி வருவதாகக் கூறி அடிகளின் அறிவுரை கேட்டு விடை பெற்றுச் சென்றனன்.

மதுரை மாநகரின் பல்வேறு காட்சிகளையும் பகலெல் லாஞ் சுற்றித்திரிந்து கண்டுகளித்துச், சாயுங்காலத்தே புறஞ்சேரிக்கு மீண்ட அவன் கவுந்தியடிகட்குத் தான் கண்டவற்றைக் கூறிக் கொண்டிருந்தான்.

ஆங்கு வந்த மாடலன் கோவலனைக் கண்டு அவன் நிலைமையறிந்து அவன்றன் முன்னை நிலைகளையும் நினைவு கூர்ந்து அளவளாவினன்; அவன் அந்நிலைக்கு ஆளாயது பழவினைப் பயன்கொலோ என்று வினயினன்.

அக்கால், கோவலன் கடந்த வைகறை யாமத்தே தான் கண்ட தீக்கனவைத் தெரிவித்து, அதன் பயன் விரைவில் நிகழும் என்றனன்.

கவுந்தியடிகளும் மாடல மறையோனும் துறவியர் அல்லாதார் அப் புறஞ்சேரிக்கண் இரவில் தங்குதல் பொருந்தாதென்றும், கண்ணகியை அழைத்துக் கொண்டு கதிரவன் மறைவுக்குமுன் மதுரைக்குள் புகுக என்றும் கோவலனை நோக்கிக் கூறினர்.

இவ்வாறு இருக்கும்போது, ஆங்குவந்து தம்மை வணங்கிய ஆயர்முதுமகளாகிய மாதரியைக் கண்ட கவுந்தியடிகள் அவள்தன் சிறப்பியல்புகளை எண்ணினர்.

அடைக்கலத்தின் மேன்மையையும், கண்ணகியின் நலங்களையும் எடுத்துக் கூறிப் பரிந்துரைத்து அவ் ஆய்ச்சியின்பால் கண்ணகியை அடைக்கலப் படுத்தினர்.

மாதரி, கண்ணகி கோவலரை உடனழைத்துக் கொண்டு கதிரவன் மறைந்து ஒளி மங்கிக் கொண்டிருந்த மாலை நேரத்தே ஆயர் சேரிக்கண் தன் இல்லத்தை அடைந்தனள்.

அடைந்து ஒரு புதுமனைக்கண் அவ்விருவரையும் தங்குவித்தனள்; தூநீராட்டினள்; தன் மகள் ஐயையை அவட்கு ஏவல் மகளாக ஏற்க வேண்டினள்; தேற்றுரை பகர்ந்தனள்.

கோவலன் இராவுணவு கொள்ளா நோன்பினன். ஆகலின் மற்றை நாள் இளங்காலையிலேயே சமைப்பதற்கு வேண்டுவன விரைந்தளிக்குமாறு ஆய்ச்சியர்க்குக் கூறினள். அவர்களும் அங்ஙனமே மடைக் கலங்களும் கூலங் காய்கனிகளும் அளித்தனர்.

கண்ணகி கோவலர் அற்றை இரவை அக் கடிமனைக் கண் கழித்தனர்.

## வியாழக்கிழமை

வியாழக்கிழமை புலரிப் பொழுதிலேயே கண்ணகி சமைக்கத் தொடங்கினாள். ஐயை, அவட்கு அடுப்புப் பற்றவைத்துக் கொடுத்து உதவி செய்தனள்.

அரண்மனையிற் காலை முரசம் ஒலித்தது.

அன்று அரண்மனைக்கு நெய்யளக்கும் முறை தமக் குரியதாம் என்பதை நினைவு கூர்ந்து தன்மகள் ஐயையை அழைத்தனளாய்த் தயிர் கடைதற்கு வந்தாள் மாதரி.

பாலுறையாமையும், காளைகள் கண்ணீர் வடிய நிற் றலும் முதலிய தீக்குறிகளைக் கண்டு "வருவதோர் துன் பம் உண்டு" என்று சொல்லி, ஐயையை நோக்கி "மயங் காதே! இக் கண்ணகியுங் காணுமாறு குரவைக் கூத் தாடுவோம்; கன்று காலிகள் துயர் நீங்கும்" என்று கூறினள்.

ஆய்ச்சியர், குரவைக்கூத்து ஆடுதற்குரிய ஏற்பாடு களைச் செய்வாராயினர்.

கண்ணகி அன்பொடு சமைத்து முறையுறப் படைத்த அமுதினைக் கோவலன் இனிதே உண்டு கொண்டிருந்த காலை ஆங்கு வந்த மாதரியும் ஐயையும் அக் கண் கொளாக் காட்சியைக் கண்டு,

"இந்த நம்பியும் நங்கையும், கண்ணனும் நப்பின்னை யுங் கொல்லோ!"

என்று மகிழ்ந்து விம்மிதம் எய்திச் சென்றனர். உண்டு இனிதிருந்த தன் கண்ணாளனுக்குக் கண்ணகி சுருளும் பிளவையும் (வெற்றிலை பாக்கு) அளித்தனள்.

கோவலன் தனியளாய் நின்ற தன் அருமை மனை வியை அருகுற அமர்த்திப், பழைமை நினைந்து அவளொ டும் அளவளாவி, அவட்கு ஆறுதல் கூறி, அவளைப் பல படப் பாராட்டி, "நின் சீறடிச் சிலம்பு ஒன்று கொண்டு யான் போய் மாறி வருவன் மயங்காது ஒழிக!" என்று வாய் மொழிந்து, அன்புறத் தழுவினன்; தன் தலையில் சூடி யிருந்த மாலையை, அவள்தன் குழலிற் சூடிக்கொள்ள அளித்தனன்; அவள் தனியளாய் இருப்பது கண்டு மனம் வெதும்பிச் சுரந்த கண்ணீரைக் கரந்தனனாய்ச் சிலம் பைக் கைக்கொண்டு, அவளைப் பிரிந்து மாட்டா நடை யோடே செல்வானாயினன்.

இமிலேறு எதிர்ந்ததனையும் இழுக்கென்று அறி யானாய்க், கடந்துசென்று கடைத்தெருவை யடைந்த அவன் ஆங்கு எதிர்ப்பட்ட பொற்கொல்லனை அணுகிச் சிலம்பை விலை போக்கப் பேச்சுக் கொடுத்தான்.

பொற்கொல்லனோ, அச் சிலம்பு கோப்பெருந்தேவிக்கு மட்டுமே யாப்புறவுடைமையின் அதனைக் கொள்ளுந் திறத்துக் கோவேந்தற்குத், தான் போய் விளம்பி வரு வதாகக் கூறிச் சென்றான்.

அக் கொடியவன் இல்லத்திற்கு அண்மையில் அவன் குறித்தவிடத்தே கோவலன் அவன்றன் வரவை எதிர் நோக்கியிருந்தான்.

ஆயர்சேரித் தாதெரு மன்றத்தே, ஆய்ச்சியர் குரவை தொடங்கி நடந்து கொண்டிருந்தது.

கணவனைப் பிரிந்த கண்ணகியின் உள்ளம் இனமறி யாத இன்னலுற்றுக் கொண்டிருந்தது.

அரண்மனை வேத்தவையின்கண் ஆடல் மகளிர்தம் நாட்டியம் நடந்து கொண்டிருந்தது.

பொற்கொல்லன் பொல்லாச் சூழ்ச்சியோடு அரண் மனையை நோக்கி நடந்து கொண்டிருந்தான்.

நாடக மகளிர் தம் ஆடல் தோற்றத்தால் அரசன் உள்ளங் கவரப் பெற்ருன் என்று ஊடல் கொண்டு, தலை நோய் வருத்தந் தன் மேலிட்டுக் கோப்பெருந்தேவி தன் கோயில் புகுந்து தாழிட்டுக் கொண்டாள்.

மந்திரச் சுற்றத்து நீங்கி மன்னவன் அந்தப் புரத்து, தாழிட்ட வாயிற்கண்ணே செல்லுங்காலை, ஆங்குப் போந்து அவன் அடிபணிந்தேத்திய பொற்கொல்லன் அரண்மனைச் சிலம்பைக் கவர்ந்த கள்வன் தன் இல்லகத்தே வந்துள்ளான் என்றமை கேட்டு ஊர் காப்பாளரைக் கூவினன்; அரசியின் சிலம்பு களவாடிய கள்வன் கையகத்தது ஆயின் கள்வனைக் கொன்று, சிலம்பை ஆங்குக் கொணருமாறு ஏவினன்.

ஊர் காப்பாளர் உடன்வர, வந்த பொற்கொல்லன் அவர் தமக்குக் கோவலனைக் காட்டலும், அவர் கோவலன் முகப்பொலிவைக் கண்டு இவன் கள்வனே அல்லனே என்று மயங்கினர்; அவனைக் கொல்லத் தயங்கினர்.

பொற்கொல்லன் பற்பல கட்டியுரைத்தான்; அரசன் தண்டனைக்கு ஆளாவீர் என்று அச்சுறுத்தினன்.

கல்லாக் களிமகன் வீசிய வெள்வாள் விலங்கூடு அறுப்பக் கோவலன் வீழ்ந்தான்.

ஆயர் சேரியில் குரவைக்கூத்து முடிந்தது. ஆயர் முது மகள் திருமால் வழிபாட்டின் பொருட்டுப் பூ முதலிய வற்றைக் கைக் கொண்டு வையைத் துறைபடியப் போயினள்.

அரண்மனைச் சிலம்பையே களவாடியவன் எனப் பெற்றமையானும், கொலைத் தண்டங் குறிக்கப் பெற்றமையானும், குடியிருப்புப் பகுதியிலேயே வெட்டப் பெற்றமையானும் கோவலன் வெட்டுண்ட செய்தி காட்டுத் தீப்போல் நகரெங்கும் பரவியது.

பரவிய செய்தி கேட்டு விரைந்து வந்தவள் ஒருத்தி, ஆயர்சேரியையடைந்து, ஆய்ச்சியரிடம் தான் கேட்டது கூறினள்.

அது கேட்ட ஆய்ச்சியர், கண்ணகியை நோக்கியும்' சுட்டியும் அவள் முழுமையாக அறிந்துகொள்ள முடியாத படி வருத்தந் தோன்றச் சிற்சில கூறி நின்றனர்.

செய்தி கொண்டு வந்தவளோ, கண்ணகிக்குச் சொல்ல நாவெழாது நின்ருள்.

தன் தலைவன் தன்னை விட்டுப்பிரிந்து சென்ற நேரந் தொட்டே இனமறியாத துன்பத் தாக்குதலுற்று நெஞ்சு அழிந்திருந்த கண்ணகி, தன் நிலைமையைக்கூறி வந்தவளி டத்தே நிகழ்ந்தது என்னவென வினவினுள்.

அவளும் கோவலன் களவுக் குற்றஞ் சாற்றப் பெற்றுக் கொலைத்தண்டங் குறிக்கப் பெற்ற செய்தியை வாய்விண்டாள்.

செய்திகேட்ட கண்ணகி பொங்கியழுந்தாள்; அரற் றினுள்; செங்கதிரோனை நோக்கித் தன் கணவன் கள்வனே என வினுயினுள்; கள்வன் அல்லன், இவ்வூர் எரியுண்ணும் என்னுங் குரல் கேட்டாள். எஞ்சிய சிலம் பைக் கையிலேந்தி ஊரவரை நோக்கி முறையிட்டும் வஞ் சினங் கூறியும் அரற்றியவாறு மதுரைத் தெருவழியே சென்று கோவலன் வெட்டுண்டு கிடந்த இடத்தை யடைந்தாள்!

அவன் தன்னைக் காணமாட்டாது சோர்ந்து கிடந்த அவலநிலையைக் கண்டாள்; அவனைத் தழுவிக் கொண்டு அழுதாள்.

மனைவியின் வருகையால் கோவலன் சற்றே தென் புற்று எழுந்தான்; அவள் முகங் கன்றியிருப்பது கண்டு வருந்தினுன்; அவள் கண்ணீரைத் தன்கையினுல் துடைத்

தான். துடைத்து 'இருந்தைக்க!' (இருக்க) என்றுரைத்து உயிர் துறந்தான்.

மேற்படி நிகழ்ச்சிகளால் பெரிதும் மனங்குலைந்த கண்ணகி, அன்றிரவை அக்கொலைக் களத்திலேயே சொல்லொணுத் துயரத்தோடு கழித்தாள்,

அற்றை இரவு அரண்மனையகத்தே கோப்பெருந் தேவி கொடியதொரு கனவு கண்டாள்.

## வெள்ளிக்கிழமை

வெள்ளிக்கிழமை பொழுது புலர்ந்தது. புகாரில் தான் கண்ட தீக்கனவை நினைவு கூர்ந்த கண்ணகி அரண் மனையை நோக்கிச் சென்றனள்.

அரசன் அரியணையில் வீற்றிருந்தனன். பாண்டிமா தேவி மங்கலப் பொருள்களையேந்தி மங்கையர் சூழ வந்து அரசனைக் கண்டு கொண்டாள்; தான் கண்ட தீக்கன வைத் தெரிவித்துக் கொண்டிருந்தாள்.

கண்ணகி வாயிற்காவலன் வழித் தன் வரவைக் கோயிற் பெருமகனுக்கு அறிவித்து, அவன் அழைப்பிக் கச் சென்று வாயிலோன் காட்டக் கண்டு, வழக்குரைத்துத் தன் கணவன் கள்வனல்லன் என்பதை மெய்ப்பித்தாள்.

தன் தவறுணர்ந்த பாண்டியன் மயங்கி வீழ்ந்து உயிர் துறந்தான்.

பாண்டிமாதேவியும் உடன் துஞ்சினுள்.

கண்ணகி கோப்பெருந்தேவியை நோக்கி வஞ்சினம் உரைத்துத் தீக்கடவுளை ஏவினள்.

மதுரை அற்றைப் பகலும் மாலையும் எரிந்து கொண் டிருந்தது.

மக்களும் பிறவுயிர்களும் ஆங்காங்கு ஓடி யொளிந் தனர்.

சீத்தலைச் சாத்தனுர் வெள்ளியம்பலத்தே பதுங்கிக் கிடந்தார்.

கண்ணகி வெந்த நெஞ்சினளாய் வெய்து உயிர்த்து நகரத் தெருக்களிலும் சந்துகளிலும் சுற்றியுங் கவன்று நின்றும், சென்றவழியே மீண்டும், மயங்கியுஞ் சோர்ந்தும் ஒருநிலைப்படாது நடந்து கொண்டிருந்தாள்.

மாலையுங் கழிந்தது.

[நள்ளிரவில் ஆயர்முதுமகளான மாதரியம்மையார் அடைக்கலப் பொருளை யிழந்தேன் என்று தாதெரு மன்றத்தே தீப்பாய்ந்தார்.]

தெய்வ நங்கையான மதுராபதி, ஆற்ருமை மிக்குக் கண்ணகியைப் பின் தொடர்ந்தாள்.

அவளொடு உரையாடிக் கோவலன் கண்ணகியரின் முற்பிறப்பு நிகழ்ச்சிகளையும், பழவினைப் பயனே அவர் தம் துன்பத்திற்குக் கரணியம் என்பதையும் எடுத்துரைத் தாள்.

சங்கமன் மனைவி நீலியின் சாவப்படி, அன்று தொடங்கிப் பதினுன்காம் நாள், கண்ணகி கோவலனை வானவர் வடிவில் கூடுவள் என்று பின்னுறுவதையும் அவட்கு உணர்த்தி, அவன்தன் சீற்றத்தைத் தணித்தாள்.

மதுரை தீயினின்றும் விடுதலை பெற்றது.

காளி கோயிலில் கைவளை உடைத்துக் கண்ணகி வையைக் கரையோட மேற்கு நோக்கிச் சென்ருள்.

○○○

# நாடக அறமா?

“வண்டார் இருங்குஞ்சி’ என்னும் பாடலை ஆசிரியர் கூற்ருகக் கொண்டு ஆரரயும் நோக்கில் அது பிழையாக வேமுடிகிறது.”

என்று முனைவர் தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர் முடித்துக் கூறுகிருர். கூறி, அதற்கு மாற்று உரைப்பார் போல் வ, சுப. மணிக்கம் அவர்கள் ‘நாடக அறம்’ என்றதனைப் பற்றிக்கொண்டு ‘அவ்வாருயின் அப்பாடலை நாடக மாந்தர் கூற்ருகக்கொண்டு ஆராயவேண்டும்’[17] என ஏடல் உரைக்கின்ருர்.

ஆகவே அதனையும் ஆராய்ந்து முடிவு செய்து கொள்ளல் நன்று.

வண்டார் இருங்குஞ்சி மாலைதன் வார்குழன் மேல்
கொண்டாள் தழீஇக் கொழுநன்பாற் காலைவாய்ப்
புண்டாழ் குருதி புறஞ்சோர மாலைவாய்க்
கண்டாள் அவன்றன்னைக் காணுக் கடுந்துயரம்

என்னும் பாடலில் கண்ணகி, கோவலன் தன்னைப் பிரியுங் கால் அவனைத் தழுவி அவன் தலைமாலையைத் தன் கூந் தலிற் சூடிச் கொண்ட காலை நிகழ்ச்சியும், வெட்டுண்ட புண்ணினின்றும் அரத்தம் கொப்புளிக்கக் கிடந்த கோவலன், தன்னைக் காணமாட்டாமையாகிய பெருந் துன்பத்தைக் கண்ணகி கண்ட மாலை நிகழ்ச்சியும் குறிப் பிடப்படுகின்றன.

ஈண்டுக் 'கொண்டாள் தழீஇ' -தழுவி (மாலையை)க் கொண்டாள் என்று ஆசிரியர் கூறுகின்றார்,

அவர்கள் பிரிந்தமையைக் கூறும் கொலைக்களக் காதையிலும் தலைமாலையை அவள் கூந்தலிற் கொண்ட தனைக் கூறுவிடினும் அவனும் அவளைத் தழுவினன் என்பதை 'ஒருங்குடன் தழீஇ'[18] என்று குறிப்பிடுகின்றார்.

கண்ணகி கோவலன் தலைமாலையைக் கொண்டது அப்பொழுதிலேயே என்பதும், தழுவிக் கொண்ட அந் நிலையில் அவர்கள் தமித்திருந்த தன்றி ஆண்டு யாரும் இலர் என்பதும் உய்த்துணரப்படும்.

அன்றியும் கோவலன் ஒருங்குடன் தழுவியமையைத் தொடர்ந்தே 'உழையோர் இல்லா ஒருதனிக்கண்டு'[19] என ஆசிரியார் கூறுகின்றமையும் இதனை உறுதிப் படுத்தும்.

மாலையில் கோவலன் உடலைக் கண்டு அழுதரற்றும் கண்ணகி

"யாருமில் மருள்மாலை இடருறு தமியேன்முன்"[20]

என்று குறிப்பிடுதலால் அந் நிலையில் அவள் தனித்தே இருந்தாள் என்பது வெளிப்படை. அற்றேல்.

"கம்பலை மாக்கள் கணவனைத் தாங்காட்ட"[21]

என்றது என்னையெனின் அவர்கள் தொலைவிலிருந்தே சுட்டிக் காட்டினர் என்பதே இடம் நோக்கி இயைபுறக் கொள்ளப்படும்.

ஆகவே, மேற்படி பாடலில் குறிப்பிடப்படும் காலை, மாலை நிகழ்ச்சிகளை யாருங் கண்டிலர் என்பது ஐயுறவுக் கிடனின்றித் தெளியக் கிடத்தலால் அப் பாடலைத் தெ. பொ. மீ. கூறுமாறு போல் நாடக மாந்தர் கூற்றுகக்

கொள்ளுதற்கு ஒரு சிறிதும் வாய்ப்பில்லை என்பதும், யாருங் காணு அக் காட்சிகளைக் கூறுந் தகுதி நூலாசிரியர்க்கே உரியதாகலின் அஃது ஆசிரியர் கூற்றேயாம் என்பதும் ஒருதலை.

வ. சுப. மாணிக்கம் கூறியாங்கு நாடக அறமென வழுவமைதி காட்டுதற்கும் இடமின்மை யறிக!

அப் பாடல் ஆசிரியர் கூற்றென்பது உறுதிப்படுதலின் 'பிழை முடிபு' தெ. பொ. மீ. க்கும் உடன்பாடேயாம் என்பதூஉங் கொள்ளப்படும் இது நிற்க!



# வழக்கும் விளக்கமும்

மேற் கூறியாங்குப் பற்பலரும் கொண்ட 'பிழை முடிபு'க்கு அடிப்படைக் கரணியம் கோவலன் கொலைப் பட்டதும், குரவைக் கூத்து நடை பெற்றதும் ஒரு நாளில் நடந்தன அல்லவென்றும், அவை முதல் நாளும் மறுநாளு மாகிய இரு நாள் நிகழ்ச்சிகளாம் என்றும் கொள்கின் றமையே யாகும்.

இது பற்றி வ. சுப. மாணிக்கம் அவர்கள் கூறுவது வருமாறு :[22]

> "கோவலன் கண்ணகியைப் பிரிந்து அந் நாள் மாலையே கொலையுண்டான் என்று வைத் துக் கொள்வோம். "நெய்ம் முறை நமக்கு இன்று ஆம்" என்று மாதிரி தயிர் கடையச் செல்லு கின்றாள். பாலுறையாமை பார்க்கின்றாள். எனவே இது மறுநாட் காலையாகும். பின்னர்க் குரவை நடைபெறுகின்றது. அதனைக் கண்ணகி கண்டு களிக்கின்றாள். குரவை முடிவில் ஊர்ப் பேச்சை ஒருத்தி வந்து கண்ணகிக்குத் தெரி விக்கின்றாள். இதனால் முதல் நாள் கோவலன் இறந்தான்; மறுநாள் மாலை கண்ணகி அத்துயரச் செய்தியை அறிந்தனள் என்பது தெளிவு"

இதனையே சிவஞானமும், சிறு பிழையாளரும் வலி யுறுத்துகின்றனர்.

காதை அமைப்பு முறையில் கொலைக்களக் காதையும் ஆய்ச்சியர் குரவையும் முன்னும் பின்னுமாய் அடுத்தடுத்த காதைகளாக அமைக்கப்பட்டுள்ளமையால் கதை நிகழ்ச்சி முறையிலும் கொலைக்களக் காதை நிகழ்ச்சிக்குப் பின்னரே ஆய்ச்சியர் குரவை தொடங்குகின்றது என்றே மேற்கூறிய சீராமலு முதல் தெ. பொ. மீ. ஈருன அனைவரும் கருதுகின்றனர்.

## இளங்கோவடிகளின் இலக்கிய உத்தி

இளங்கோவடிகளார் கதை நிகழ்ச்சிகளை ஆற்றெழுக்காக நிரல் படுத்துரையாது நாடகப் பாங்கு நன்கணம் சிறப்பச் சிற்சில இடங்களில் முன்னை நிகழ்ச்சிகளைப் பின்னர்ப் புலப்படுத்தும் (Flash back) இலக்கிய உத்தியைத் திறம்படக் கையாளுகின்றார்.

மாதவியினிடத்தே கோவலற்குப் பிறந்த மகளான மணிமேகலையைப் பற்றி முன்னம் ஏதுமே கூறுதுவிட்டு அவன் கொலைக்களப் படுதற்கு முற்பட்ட அடைகலக் காதையில் மாடலன் வாய்வழி வெளிப்படுத்தலும்,

அவன்றன் பெருவீரத்தையும் அருள் நெஞ்சத்தையும் கொடைத் திறத்தையும் வெளிப்படுத்துவனவான கடக்களிறு அடக்கியது முதலான முன்னை நிகழ்ச்சிகளையும் அடைக்கலக் காதையிலேயே அம் மாடலன் வாய்வழியே வெளிப்படுத்தலும்,

கோவலன் புறஞ்சேரிப் பொழிலில் புலரிப் பொழுதில் கண்ட கனவை, மனத்தகத்துக் கரந்து பிற்றை நாள் சாயுங்காலத்தே அவன் மாடலற்குக் கூறுமுகமாக வெளிப்படுத்துதலும்,

கடிமனைக்கண் கண்ணகியை விட்டுப் பிரியுங் காலத்தே அவள் அவனைத் தழுவி அவன் தலைமாலை

யைத் தன் கூந்தலிற் சூடிக் கொண்டமையை ஆண்டுக் கூறுது கொலைக்களத்தே வெட்டுண்டு கிடந்த அவனைக் கட்டியழுங் காலத்தே (ஊர்சூழ்வரியில்) கூறுதலும்,

மதுரை தீப்பட்ட அற்றை நள்ளிரவே மாதரியம்மை தீப் பாய்ந்தமையை ஆங்குக் கூறுது (வஞ்சிக் காண்டத்து) நீர்ப் படைக் காதையிற் கூறலும்,

இன்னோரன்ன பிறவும் கண்டு கொள்க!

## இணைப்பும் பிணைப்பும்

கண்ணகி கோவலரை மாதரியம்மை கடிமனைப் படுத்தியமை கூறிக் கொலைக்களக் காதையைத் தொடங்கிய ஆசிரியர் அடிசிலாக்குதற்கு வேண்டுவன தருமாறு மாதரி ஆய்ச்சியர்க்குக் கூறியதும் பிறவுமான அம் முன்னிரவு நிகழ்ச்சிகளையே பின்னுந் தொடர்கிருர்.

மற்றை நாட் காலையிற் கடிமனையிற் கண்ணகி சமைத்துப் படைத்ததும், கோவலன் உண்டு பிரிந்ததும் ஆகியவற்றைக் கூறிக் கோவலனைப் பின் தொடர்ந்தது

அவன் பொற்கொல்லனைக் கண்டதும். பொற்கொல்லன் கோவலனை இருத்தி அரண்மனைக்குச் சென்றதும் கூறி,

அரசன் ஆடல் கண்டதும், அரசி ஊடல் கொண்டதும் பொற் கொல்லன் அரசன் பால் பொய்மை விண்டதும் அரசன் உத்திரவு பெற்று வந்த ஊர்க்காப்பாளருள் ஒருவன் கோவலன் மேல் கொலைவாள் ஒச்சியதும் ஆகிய நிகழ்ச்சிகளை மிகச் செப்பமாகச் சுவைகுன்ருது தொடர்ந்து கூறி,

அக் காதையை அதன் பெயருக்கேற்ப நிறைவு செய்தார்.

அடுத்து ஆயர்சேரியின் அற்றை நாள் (வியாழன்) நிகழ்ச்சிகளையே கூறத் தொடங்கிக் காலைப் பொழுதில் மாதரியம்மை தயிர் கடையச் சென்றதும், தீக்குறி கண்டதும், மகள் ஐயையை நோக்கிக் கண்ணகியுங் காணக் குரவை யாடுவோம் என்றதும், பின் குரவை ஆடியதும் மாயனை நோக்கி வேண்டியதுங் கூறி அக் காதையையும் அடிகள் நிறைவு செய்தார்.

தொடர்ந்து துன்பமாலையுள் குரவைக் கூத்தின் இறுதியில் ஆய்மகள் ஒருத்தியின் வாய் மொழியாகக் கொலைக் கள நிகழ்ச்சியைப் பிணைத்துப் பின்னர்த் துன்பமாலையையும் ஊர் சூழ் வரியையும் அடுத்தடுத்து இணைத்து அடிகள் கதையைச் செவ்விதின் நடத்திச் செல்லும் திறம் நனிமிக வியத்தற் பால தொன்றும்.

அடைக்கலம் புக்க மறுநாள் (வியாழன்) காலையில் கடிமனையில் தொடங்கிக் கொலைக்களம் வரையில் அற்றை நிகழ்ச்சிகள் கோவலனையே பின் தொடர்கின்றன.

கொலைக்களக் காதை கடிமனையும், வழி நிலையும், அரண்மனையும், கொலைக்களமும் என்னும் நான்கு நிகழ் இடங்களைக் கொண்டுள்ளமையும் அவை நான்கும் கோவலனையே நடுவாகக் கொண்டு நடைபெறுகின்றமையும் அவற்றுள் அரண்மனை நிகழ்ச்சி சற்றே விலகிநிற்பினும் அது முற்றும் வேறுபட்டு நில்லாமையும் நுணித்து உணர்ந்து கொள்க!

அற்றை நாளில் ஆயர்சேரியில் நிகழ்ந்த மற்றை நிகழ்ச்சிகளை ஆசிரியர் அக் காதையில் இடை நுழைத்திலர்.

அவ்வாறன்றி அக் காதையிலேயே நுழைக்கப் புகுந்து ஆய்ச்சியர் குரவை நிகழ்ச்சிகளையும் கூறியிருப்பின் கதைப் போக்கு பலதலையான் சுழன்று ஆசிரியன் நோக்கத்தைக் கெடுத்திருக்கும்; விறுவிறுப்புத் தளர்ந்து சுவை குன்றிப் போயிருக்கும் என்பது ஒருதலை.

இவற்றை யெல்லாம் நுண்ணிதின் உணர்ந்தே அடிகள் ஆய்ச்சியர் குரவையைக், கொலைக்களக் காதையை அடுத்து வைப்பாராயினர்.

அன்றியும் முன்னை வேட்டுவவரி போலவும், பின்னைக் குன்றக் குரவை போலவும் ஆய்ச்சியர் குரவையைத் தனியொரு காதையாக இனிதமைக்கவும் வாய்ப்பாயிற்று.

கொலைக்களக் காதையும், ஆய்ச்சியர் குரவையும் அடுத்தடுத்து தனித்தனி நிற்பினும், நிகழ்ச்சி வகையாற் பின்னிப் பிணைந்து கிடக்கின்றன என்பதையும், முற்பகுதி யொழிந்த கொலைக்களக் காதையும், ஆய்ச்சியர் குரவையும், மற்றுத் துன்பமாலை, ஊர்சூழ்வரி ஆகியனவும் ஒரே நாளில் நடந்த நிகழ்ச்சிகளாம் என்பதையும் நுணித்துணர மாட்டாதார் தத்தம் மனத்தனவும், வாய்தந்தனவுங் கூறி வழுப்படுகின்றனர்.

○○○

# தடையும் விடையும்

அரண்மனையில் காலை முரசம் ஒலிக்கக் கேட்ட மாதரி அன்று தமக்கு நெய்ம் முறையாம் என நினைவு கூர்ந்து ஐயையை விளித்துத் தயிர் கடையச் சென்றாள்.

## வருவது ஒன்று உண்டு

சென்றவள், குடப்பாலுறையாமையும் பிறவுமாகிய தீக்குறிகள் கண்டாள்.

கண்டு, ஏதோ தீமை வரவிருக்கிறது என்ற முடிவிற்கு வந்தாள்.

மாதரி தீக்குறிகள் கண்டதும், வருவது ஒன்று உண்டு எனக் கொண்டதும்.

"குடப்பா லுறையா குவியிமி லேற்றின்
மடக்கணீர் சோரும் வருவதொன் றுண்டு
உறிநறு வெண்ணெய் உருகா வுருகும்
மறிதெறித் தாடா வருவதொன் றுண்டு
நான்முலை ஆயம் நடுங்குபு நின்றிரங்கும்
மான்மணி வீழும் வருவதொன் றுண்டு"[23]

என்னும் உரைப்பாட்டு மடையான் விளங்கும்.

தீக்குறிகள் என்பன தீமை வருவதற்கு முன்னரே அதன் வரவைக் குறிப்பாற் புலப்படுத்துவனவே யன்றி வந்தபின் தோற்றுவன அல்ல.

ஆகவே கோவலன் கொலைப்படுதற்கு முன்னர் அற்றைக் காலையிலேயே இத் தீக்குறிகள் தோன்றின என்றலே ஏற்புடைத்தாம்.

மற்றுக் கோவலன் முதல் நாளே வெட்டுண்டு கிடப்ப, மறுநாட் காலையில் தீக்குறிகள் தோன்றின என்றல் ஏலாத தொன்றும்.

உரைப்பாட்டு மடையில் மாதரி வாய்மொழியாக அடிகள், 'வருவதொன்று உண்டு' என முக்காலும் வருங் காலத்தில் வைத்து ஒருதலையாய் உரைத்த தன்றி வந்த தொன்றுண்டு என இறந்த காலத்தில் குறித்தாரும் அல்லர்; வந்த தொன்றுண்டுகொல்! வருவதொன்று உண்டு கொல்!' என ஐயத்தின் பாற்படுத்து இருதலையாகக் குறித்தாரும் அல்லர்.

## எதனைக் குறிக்கும்?

மாதரி தீக்குறி கண்டமையைக் குறிப்பிட்டுத் தீக் குறிகள் எதிர்காலத்து வரவிருக்கும் தீமையை முன்னர்க் குறிப்பால் அறிவிப்பனவாம் என்பதனையும் கூறி, அதற்குக் 'கண்ணகி கருங்கணும் மாதவி செங்கணும்' என் பதனையும் எடுத்துக் காட்டிய சிறுபிழையாளர், மாதரி கண்ட தீக்குறி கோவலன் கொலைப்பட்டதைக் குறியா தெனத் தங்குறிப்பின் வழியே கூறினர்.

தீமை முன்னரே வந்திருப்பினும் தொடர்புடையவர் கள் அதனை அறியாமையால் அவர்க்கு அதனை அறிவிக் கும் பொருட்டே தீக்குறிகள் தோன்றின வெனின், அது முற்குறிகள்—முன்னறிவிப்புகள் என்றற்கு முழுமையும் பொருந்தாது; இலக்கியத்தின் போக்கிற்கும் இயையாது. என்னை?

கோவலன் மாதவியை விட்டு நீங்கிக் கண்ணகியை வந்தடைதற்கு முன்னரே அதனைக் குறிப்பாற் புலப் படுத்துவனவாக,

> ''கண்ணகி கருங்கணும் மாதவி செங்கணும்
> உண்ணிறை கரந்தகத் தொளித்து நீ ருகுத்தன
> எண்ணுமுறை இடத்தினும் வலத்தினுந் துடித்தன''[24]

என்ற மெய்ப்பாடும்,

அவன் கடிமனையின் நீங்கிச் சிலம்பு விற்கச் செல் லுங்கால் 'இமிலேறு எதிர்ந்தது' என்ற எதிர்ப்பாடும், பற்றிய ஆசிரியர் கூற்றுகள் எதிர்காலம் பற்றிய (நிகழ்ச் சிக்கு முற்பட்ட) முற்குறிகளேயாம் என்பதில் ஐய மில்லை.

> ''... ... ... என் கைப்
> பிடித்தனன் போயோர் பெரும்பதியுட் பட்டேம்
> பட்ட பதியிற் படாத தொருவார்த்தை
> இட்டனர் ஊரார் இடுதேளிட் டென்றன்மேல்
> கோவலற் குற்றதோர் தீங்கென் றதுகேட்டுக்
>
> காவலன் முன்னர்யான் கட்டுரைத்தேன்
> காவலனோ(டு)
> ஊர்க்குற்ற தீங்குமொன் றுண்டால் உரையாடேன்
> தீக்குற்றம் போலும் செறிதொடீஇ தீக்குற்றம்
> உற்றேனோ டுற்ற உறுவனோ டியானுற்ற
> நற்றிறங் கேட்கின் நகையாகும்...''[25]

என்ற கண்ணகியின் கனவும்,

> ''... ...ஓர் குறுமகன் தன்னால்
> காவல் வேந்தன் கடிநகர் தன்னில்
> நாறைங் கூந்தல் நடுங்குதுயர் எய்தக்

கூறைகோட் பட்டுக் கோட்டுமா ஊரவும்
அணித்தகு புரிகுழல் ஆயிழை தன்னொடும்
பிணிப்பறுத் தோர்தம் பெற்றி எய்தவும்
மாமலர் வாளி வறு நிலத் தெறிந்து
காமக் கடவுள் கையற் றேங்க
அணிதிகழ் போதி அறவோன் தன்முன்
மணிமே கலையை மாதவி அளிப்பவும்'[26]

என்ற கோவலனின் கனவும்,

"செங்கோலும் வெண் குடையும்
  செறிநிலத்து மறிந்து வீழ்தரும்
நங்கோன்றன் கொற்ற வாயில்
  மணிநடுங்க நடுங்கு முள்ளம்
இரவுவில்லிடும் பகல்மீன் விழும்
  இருநான்கு திசையு மதிர்ந்திடும்"[27]

என்ற கோப்பெருந்தேவியின் கனவும் ஆகிய மூன்று கனவுகளும்,

"கடிதீங்கு உறும்[28]" எனக் கோவலனும், 'வருவதோர் துன்ப முண்டு[29]' எனக் கோப்பெருந்தேவியும் கொண்ட முடிபுகளும்,

எதிர்காலங் குறித்தே (நிகழ்ச்சிக்கு முற்பட்டுத்) தோன்றிய தீக்குறிகளேயாம் என்பதில் எள்ளள வேனும் ஐயம் உண்டுகொல்!

மேற்கூறிய மெய்ப்பாடும் எதிர்ப்பாடும் ஆகிய ஆசிரியர் கூற்றுன நிகழ்ச்சிகளும், நாடக மாந்தர் கூற்றுன மூன்று கனவுகளும் போலவே மாதரி கண்ட தீக் குறியும், 'வருவதொன்றுண்டு' என அவள் கொண்ட முடிபும் (தீமை நிகழ்தற்கு—அஃதாவது கோவலன் கொலைக்கு முற்பட்டனவே) எதிர்காலம் பற்றியனவே என்பது ஒரு தலையாய்த் துணியப்படும்.

இனி, மன்னற்கும் மதுரைக்கும் பின்னர் வரவிருக்கும் பெருந் தீங்கையே குடப்பால் உறையாமை முதலிய தீக்குறிகள் சுட்டின என்றல் அமையுமோ எனின், அவற்றைக் குறிக்கக் கோப்பெருந்தேவியின் கொடிய கனவு யாப்புற நிற்றலின் அவ்வாறு கூறுதல் மிகையாம் என்று அறிக!

அஃதொக்கும், கோவலற்குங் கண்ணகிக்கும் வரவிருக்கும் பெருந்தீங்கைச் சுட்டும் முற்குறிகள் அவ்விருவருள் ஒருவர்க்கும் தோன்ருது மாதரிக்குத் தோன்றியது ஏனெனிற், கூறுதும்.

புகாரில் கண்ணகி கண்ட தீக்கனவின் பயன் நிறைவேறத் தொடங்கியுள்ளது; ஒரு சிறிதே நிறைவேறியுள்ளது.

புறஞ்சேரியில் கோவலன் கொடுங்கனவு கண்டு ஒரே ஒருநாள்தான் ஆகியுள்ளது. அதனையும் அவன் அற்றை எற்பாட்டிலேதான் வெளிப்படுத்தியுள்ளனன். கண்ணகி அதனை அறிந்ததும் அப்பொழுதேயாம்.

அதனையடுத்துக் கடிமனையிற் கழிந்தது ஒரே ஓர் இரவு மட்டுமேயாம்.

இந்நிலையில் அவர்களுக்கே தீக்குறி தோன்றுதல் மிகையாம். இலக்கியச் சுவையும் நீர்த்துப்போம்.

ஆதலினலேயே அவர்களை அடைக்கலம் ஏற்று வந்த மாதரிக்குத் தீக்குறி தோன்றிய தென்க!

கோவலன் செல்வழியில் இமிலேறு எதிர்ந்ததனைக் கூறுமிடத்து அவன் அதனை 'இழுக்கென்று அறியான்'[30] என்று எதிர்மறை முகத்தான் உணர்த்திய நுட்பமும் உணர்ந்து இன்புறற் பாற்று.

## குரவையின் நோக்கம்

முதல்நாள் முற்பகலில் கண்ணகியைப் பிரிந்து சென்ற கோவலன் அற்றைப் பகலும் இரவும் மீண்டிலன் என்று கொண்டால் அவனைப் பற்றிய செய்தி யொன்றும் கண்ணகி அறிந்திலாமையின் அவள் பெரிதும் துயருற்றிருத்தல் வேண்டும். அதனை மாதரியும் ஐயையும் அறியாதிருத்தலும், அவர்களும் வருந்தாதிருத்தலும் இயலா.

இந்நிலையில் காலையில் தீக்குறி கண்ட மாதரிக்கு முதற்கண் தோன்றியிருக்க வேண்டிய கவலை கோவலனைப் பற்றியதே அன்றோ!

அவ்வாறு கோவலன் மீண்டு வாராமையொடும் சார்த்திப் பார்த்திருத்தலும் தீங்கேதுமின்றி மீண்டு வர வேண்டிக் குரவையாடுதலுமே இயல்பாய் நிகழற் பாலனவாம்.

கண்ணகி கோவலனைப் பிரிந்தபின் ஓர் இரவைத் தனித்துக் கழித்தாள் என்பதற்கோ இரவில் வருந்தினள் என்பதற்கோ, அது கண்டு மாதரியும் ஐயையும் வருந்தினர் என்பதற்கோ சான்றேதுமில்லை.

இது பற்றி ம. பொ. சி. கொண்ட கருத்து பிழைபாடாதலைப் பிறிதோராற்றான் பின்னர்க் காட்டுதும்,

தீக்குறி கண்ட மாதரி அதனைக் கோவலன் மீளாமையொடு சார்த்திப் பேசினளுமல்லள். குரவை தொடங்குதற்கு முன்னர்,

"குரவையாடுதும் யாமென்றாள்
கறவை கன்றுகள் துயர்நீங்குக எனவே"31

என்றும், ஆட்டத்தின் முடிவிலும்,

"கோத்த குரவையுள் ஏத்திய தெய்வ நம்
ஆத்தலைப் பட்ட துயர்தீர்க்க"[32]

என்றும் தீக்குறிகளை ஆவினத்திற்கு வரும் தீவினையாகவே குறிப்பிடுகின்றாள்.

"கண்ணகியுந் தான்காணக் குரவையாடுதும் யாம்"[33] என்று மாதரி கூறிய தென்னையெனின், கண்ணகி விருந்தினள் ஆதலானும், குரவைக் கூத்து அன்றாட நிகழ்ச்சியன்றாய் ஒரோவழி நிகழ்வதொன்றாதலானும் தனது ஆயர் குலத்திற்குச் சிறப்புரிமையுடையது ஆதலானும் அங்ஙனம் கூறியதன்றி வேறில்லை என்க!

## தடையாகுமா?

"வையெரி மூட்டிய ஐயை தன்னொடு
கையறி மடைமையிற் காதலற் காக்கி"[34]

என்றலால் கண்ணகி சமைக்கத் தொடங்கிய காலை ஐயை அவட்கு அடுப்பு மூட்டிக்கொடுத்துத் துணை செய்தாள் என்றும், கோவலன் உணவு கொள்ளுங்கால்

"ஆயர் பாடியின் அசோதைபெற் றெடுத்த
பூவைப் புதுமலர் வண்ணன் கொல்லோ
நல்லமு துண்ணும் நம்பி ஈங்குப்
பல்வளைத் தோளியும் பண்டுநங் குலத்துத்
தொழுநை ஆற்றுள் தூமணி வண்ணனை
விழுமந் தீர்த்த விளக்குக் கொல்லென
ஐயையுந் தவ்வையும் விம்மித மெய்திக்
கண்கொளா நமக்கிவர் காட்சி ஈங்கு"[35]

என்று வியந்தும் மகிழ்ந்தும் பேசினர் என்றும், கொலைக்களக் காதையிலும், மாதரி ஐயையை நோக்கி

"மண்ணின் மாதர்க்கு அணியாய
கண்ணகியுந் தான்காண .. ......
குரவை ஆடுவதும் யாம்"[36]

என்று கூறினள் என ஆய்ச்சியர் குரவையிலும் கூறியுள் ளமையான்,

அவை, கோவலன் பிரிந்து சென்ற அற்றை முற் பகலே குரவைக் கூத்தும் நடைபெற்றது என்றற்குத் தடையாக மாட்டாவோ எனின், ஆகமாட்டாமை காட்டுதும்.

கண்ணகியின் சமையலுக்கு ஐயை அடுப்பு மூட் டிக் கொடுத்ததும், துணை நின்றதும் அற்றைச் சிறுகாலைப் பொழுதிலேயாம்.

தீக்குறி கண்ட மாதரி ஐயையை விளித்து அது பற்றிக்கூறி 'யாம் குரவையாடுதும்' என்று கூறியதும் ஏறத் தாழ அப்பொழுதே எனலாம்.

கோவலன் உணவு கொள்ளுங்கால் ஐயையும் தவ் வையும் விம்மிதம் எய்திப் பேசிக் கொண்டதும் சிறு பொழுதைய நிகழ்ச்சியேயாம்.

ஆகவே இடை நிகழ்ந்த சிறு நிகழ்ச்சி ஆய்ச்சியர் குரவைக்கு ஆவன செய்தற்கு இடையூறு ஆகுமாறில்லை.

ஐயையும் மாதரியுமோ, இருவருள் ஒருவர் மட் டுமோ கடிமனையிலேயே தொடர்ந்து இருந்தனர் என்று ஆசிரியர் யாண்டும் கூறிற்றிலர். எவ்வாற்றானும் பெறப் படவும் மாட்டாது.

அன்றியும் கோவலன் உண்டது கண்டு அவர்கள் பேசிக் கொண்டபின் அவ்விடத்தினின்றும் நீங்கி விட்ட னர் என்பதும், மீண்டும் அவர்கள் ஆண்டு வந்திலர் என்பதும் கோவலனுங் கண்ணகியும் பழமை நினைந்து

பேசிக் கொண்டமையானும், கோவலன் பிரியுமுன் அவளை ஒருங்குடன் தழுவியமையானும் அறியப்படும்.

ஆகவே குரவைக் கூத்துக்கு முற்பட்ட மேற்கூறிய ஐயை மாதரி தொடர்பான காலைப் பொழுதைய கடிமனை நிகழ்ச்சிகள், கோவலன் பிரிவும் குரவைக் கூத்தும் ஒரு நாளைய நிகழ்சிகள் என்றற்குத் தடையாக மாட்டா என்று கண்டு கொள்க!

## குரவைக் கூத்து எப்போது?

கடிமனையிற் கண்ணகி அடுதொழிலில் ஈடுபட்ட அற்றைச் சிறுகாலைப் பொழுதிலேயே மாதரியும் தயிர் கடையச் சென்று, தீக்குறி கண்டு கண்ணகிக்கு அடுப்பு மூட்டிக் கொடுத்து அடுவினைக்குத் துணை நின்ற ஐயையை விளித்துத் தீக்குறி பற்றிக் கூறி, வருவதொன்று உண்டு எனக் கொண்டு, அது 'நீங்குமாறு கண்ணகியுங் காணக் குரவையாடுதும் யாம்' என்று கூறினள் என்பதும்.

பின் அவர்கள் குரவைக் கூத்திற்குரிய ஏற்பாடு களைச் செய்து கொண்டிருந்தனர் என்பதும்,

கோவலன் உணவு கொள்ளுங்கால் ஆங்கு வந்த அவ்விருவரும் அது கண்டு விம்மிதம் எய்திப் பேசிச் சென்றனர் என்பதும்,

ஏறத்தாழக் கோவலன் கண்ணகியைப் பிரிந்து செல் லுங்காலையே அவர்களும் குரவையாடத் தொடங்கினர் என்பதும்,

பின் கண்ணகியும் அக் கூத்தைக் கண்டாள் என் பதும்,

அப்பொழுதே அவள் மனம் இனமறியாக் கலக்க முற்றுக் கொண்டிருந்தது என்பதும்.

ஒருபுறம் குரவை உச்சக் கட்டத்தில் நடைபெற்றுக் கொண்டிருந்த ஈற்றயல் நிலையிலேயே பிறிதொரு புறம் கோவலன் வாளேறுண்டான் என்பதும்,

குரவை முடிவிலேயே அச் செய்தி கண்ணகிக்குக் கிட்டியது என்பதும் பிறவுமே எம்முடைய கருத்தாம்.

மேலே நிகழ்ச்சித் தொகுப்பிலும் இதனை இயைபுறக் காட்டியிருக்கின்றேம்.

## ஆடுதும் யாம்

கோவலன் பிரியுங்காலை அவர்கள் இல்லாத வேறு இடத்தில் குரவை நடந்திருக்கும் என்ற (பிறர்) கருத்தை மறுத்துரைக்கும் ம. பொ. சி.

> "மண்ணின் மாதர்க்கு அணியாகிய
> கண்ணகியுந் தான் காண'

குரைவைக் கூத்து நிகழ்ந்ததாக ஆசிரியர் கூறுவதும் எம் கருத்தை வலியுறுத்துகின்றது" 37

என்று குறிப்பிடுகின்றூர்.

இவ்வாறு ஆசிரியர் யாண்டும் கூறிற்றிலர்.

தீக்குறி கண்ட மாதரி தன் மகளை நோக்கி, "கண்ணகியுந் தான் காண......... குரவையாடுதும் யாம்" என்று (எதிர்காலத்தில்) குறித்து அன்றி வேறில்லை.

"கண்ணகியுந் தான் காண"

என்ற வரையில் ஆசிரியர் கூற்றை அப்படியே எடுத்துக் கொண்ட சிவஞானம் அவர்கள்

"ஆடுதும் யாம்"

என்னும் மொழியை மறைத்து

"நிகழ்ந்ததாக (இறந்த காலத்தில்) ஆசிரியர் கூறுவதும்"

என்று தம் நடையாய்த் திரித்துக் கருத்தை வலியுறுத்த முற்படுகின்றார்!

மேற்கூறிய மாதரியின் கூற்றைத் தாங்கி நிற்குங் 'கருப்பம்' அவள் தீக்குறி கண்ட அளவானே தன் மகளை நோக்கிக் கூறியதே ஆகும் என்பதையும் கருப்பம் முடிந்து இடைநேரங் கழிந்தே ஆய்ச்சியர் கூடினர் என்பதையும் பின்னரே குரவை ஆடினர் என்பதையும் உணர்ந்து கொள்க!

மாதரி கருப்பத்திற் கூறியது எதிர் காலத்ததே ஆயினும் அவ்வாறே கண்ணகியுங் காணக் குரவை நடந்ததாகக் கொள்ளுதல் பிழையாமோ வெனின், பிழையன்று. ஆயின் ஆட்டத்தின் தொடக்கத்தை ஒட்டிய சிறிது நேரத்தில் கோவலன் கண்ணகியைப் பிரிந்திலன்—பிரிந்திருத்தல் இயலாது என்றல் பொருந்தாது என்பதே எமது கருத்தாம்.

'குரவைக் கூத்து நிகழ்ந்ததோ விடியற்காலை நேரத்தில் என்பதனை.

'மாலை வெண்குடை மன்னவன் கோயிலில்
காலை முரசங் கனைகுரல் இயம்பும் ஆகலின்
நெய்ம்முறை நமக்கின்றும் என்று
ஐயை தன் மகளைக் கூஉய்க்
கடைகயிறும் மத்துங் கொண்டு
இடை முதுமகள் வந்து தோன்றுமன்'

என்ற வரிகளும், அதனை அடுத்து 'உரைப்பாட்டு மடை" 'கருப்பம்' என்ற தலைப்புகளில் வரும் வரிகளும் குரவைக் கூத்து நிகழ்ந்த நேரம்

பொழுது விடிந்த தருணம் என்பதனைப் புலப் படுத்தும்''[38]

என்கின்றார் ம. பொ. சி.

மேற்காட்டிய பாடலடிகள் சிறுகாலைப் பொழுதில் மாதரி தயிர் கடையச் சென்றாள் என்பதையும்,

'உரைப்பாட்டுமடை' மாதரி தீக்குறி கண்ட அள வானே (தீமை) வருவதொன்று உண்டு' எனக் கருதி னாள் என்பதையும்,

'கருப்பம்' அவள் தன் மகளை நோக்கிக் கறவை கன்று துயர்நீங்கக் குரவை யாடுதும் யாம் என்று கருத் துரைத்தாள் என்பதையும்,

புலப்படுத்துவதன்றி, அவர் கூறுமாறு போல் குர வைக் கூத்து நிகழ்ந்த நேரம் விடியற் காலத்தே—

'பொழுது விடிந்த தருணம்'

என்பதைப் புலப்படுத்துமாறு யாங்ஙனம்?

ம. பொ. சி. தமதுரையில் 'என்பதை' 'என்பதை' என்று ஈரிடத்துக் குளறுதலும், 'வரிகளும்' என்று பன் மையால் முடித்து, அதனையே 'அதனை' என்று ஒருமையாற் கூட்டுதலுமே இவர்தம் குழப்படியான நிலையை வெளிப் படுத்துகின்றன அல்லவா!

## இடை நேரம்

தயிர் கடையச் சென்றவள் தீக்குறி கண்டு, வருவது ஒன்று உண்டு' எனக் கருதி, வருதுயர் நீங்க யாம் குரவை யாடுதும்' என்று தன் மகளைக் கூவிக் கூறிய அளவானே குரவை தொடங்கி விட்டதென்றும் முடிந்து விட்டதென் றும் எவ்வாறு கூறுதல் இயலும்?

21B

மாதரியும் ஐயையும் தாம் கண்டதும், கொண்டதும் மற்றை ஆய்ச்சியர்க்குத் தெரிவிப்ப, அவ்வவருந் தத்தம் நாட் கடன்களை முடித்துக் கொண்டும், பிற பணிகளை ஒதுக்கி வைத்து மாற்று ஏற்பாடு செய்து கொண்டும், குரவை யாடுதற்குத் தகத் தம்மைச் சித்தப் படுத்திக் கொண்டு வருவதற்கும்,

புல்லியக்காரரும் அங்ஙனமே வருதற்கும்,

ஆடுகளத்தை அணியப்படுத்துதற்கும்

உரிய நேரம் வேண்டும் என்பதை உணராது நடைமுறைக்கு முரண்பட உடனே குரவைக் கூத்து நடந்தது எனல் யாங்ஙனம் பொருந்தும்?

பாட்டும், உரைப்பாட்டு மடையும், கருப்பமும் கொளுவும் என அடிகள் அடுத்தடுத்துச் சொல்லிச் செல்கின்றார் எனினும் கருப்பத்திற்கும் கொளுவிற்கும் இடையில் காலமுறையான் இடைவெளி உண்டென்பதை உய்த்துணர்ந்து கொள்க!

அங்ஙனம் கொள்ளுதல் நடைமுறை நிகழ்ச்சிக்கும் நாடக இயல்பிற்கும் ஒவ்வாதது அன்று.



## ம. பொ. சி. யின் இயல்பு

மேற்கூறியாங்குப் பாடலடிகள் சிலவற்றை எடுத்துக் காட்டுதலும், அவற்றுள் இருப்பவற்றோடு தாம் கற்பனை செய்து கொண்டவற்றையும் இட்டுக்கட்டி அவற்றையெல்லாம் அவ் அடிகள் புலப்படுத்துவனவாகக் கூறுவதும் சிவஞானம் அவர்களின் இயல்பெனத் தெரிகின்றது. சில காட்டுதும்:

'கண்ணகி மதுரையை எரித்தது வெள்ளிக் கிழமை மாலை நேரத்தில் என்பதனை

ஆடித் திங்கள் பேரிருள் பக்கத்து
அழல் சேர் குட்டத்து அட்டமி ஞான்று
வெள்ளி வாரத்து ஒள்ளெரி உண்ண
உரைசால் மதுரையோடு அரைசுகேடு உறும்
எனும்
உரையும் உண்டே நிறை தொடி யோயே'

என்று மதுராபதித் தெய்வம் கண்ணகிக்குக் கூறுவதால் அறிகிறோம்."[39]

என்பது ம. பொ. சியின் கூற்று.

அறிஞர்காள் எண்ணிப் பார்மின்! அவர் எடுத்துக் காட்டும் பாடற் பகுதியால், கடகத் திங்கள் என்பதும், இருட் பக்கம் (கிருஷ்ணபட்சம்). அழல்(கார்த்திகை) விண்மீன் குறையுடைய—தேய்பிறை எட்டாம் நாள் என்பதும், வெள்ளிக்கிழமை என்பதும், பெறப்படுவதன்றி மாலைநேரம் என்பது எவ்வாற்றானும் பெறப் படாதிருக்கவும், அவர் எத்துணைத் துணிச்சலாக மாலை நேரம் என்பதனையும் சேர்த்துக் கட்டிக் கூறுகின்றார்!

இருட்பக்கம் என்றதன் பொருளுணர மாட்டாது மாலை என்று மயங்கினர் போலும்!

## காய் கதிர்ச் செல்வனே

"கோவலன் கொலையுண்ட மறு நாள்—அதாவது தான் மதுரை புகுந்த மூன்றாவது நாள் காலை அடிவானில் கதிரவன் தோன்றி உச்சி வானத்தை நோக்கி எழுச்சி கொள்ளும் முற்பகல் நேரத்தில்தான் கோவலன் கொலையுண்ட செய்தியைக் கண்ணகி அறிந்தாள் என்பது

'காய் கதிர்ச் செல்வனே கள்வனோ என் கணவன்' என்று கதிரவனை நோக்கி அவள் கேட்பதால் அறிகின்றோம்"[40]

என்று மற்றோரிடத்தில் குறிப்பிடுகின்றார் ம. பொ. சி. அவர் காட்டியுள்ள அடி அவர்தாங் கட்டியுரைக்கும் பொருளைத் தருமா என்பதை எண்ணிப் பார்மின்.

''கோவலன் கொலையுண்ட மறுநாள் அதாவது தான் மதுரை புகுந்த மூன்றாவது நாள்''

என்பதைத் தங் கற்பனையால் முன்னரே சிவஞானம் முடிவு செய்து கொண்டுள்ளார்.

''காய் கதிர்ச் செல்வனே என்றமையால்', அடி வானில் கதிரவன் தோன்றி உச்சி வானத்தை நோக்கி எழுச்சி கொள்ளும் நேரம்'' என்று கட்டுகின்றார்.

இங்ஙனம் கொள்ளுதற்கு யாதாயினும் யாப்புறவு உண்டுகொல்!

'காய்கதிர்! என்றமையால் வெப்ப மிகுதியைக் காட்டியதென்றும், செல்வன் என்னுஞ் சொல் இக் காலத்து இளமை குறித்த பெயராய் வழங்கப்படுகின்றமை நோக்கி ''உச்சிப் பொழுதைக் கடவாதவன்'' என்றும் கருதி அவ்வாறு அவர் உரைத்திருக்கக் கூடுமோ என்று ஊகிக்கின்றேம்.

அஃது உண்மையாயின் 'காய்கதிர்' என்பது முக் காலத்துள் எக்காலத்துக்கும் பொருந்தும் வினைத்தொகை என்பதையும், 'செல்வன்' என்னுங் குறிப்பு வினை யாலணையும் பெயர் அவ்வாறு பருவங் குறித்தது அன்று என்பதையும் அவர் அறிகிலர் போலும் என விடுக்க!

'கதிர்' என்னுது 'காய்கதிர்' என்றமையான் வெப்ப மிகுதிகொள்ளலாகாதோ எனின் அவ்வாறு ஆகாது எனக்கூறுதல் எமது கருத்தன்று.

ஆயின் அது பற்றி

"அடிவானில் கதிரவன் தோன்றி உச்சி வானத்தை நோக்கி எழுச்சிச் கொள்ளும் நேரம்"

என்று நீட்டுதற்கு இடனில்லை என்றறிக! அன்றியும் ஈண்டுக் குறிப்பிடப்படும் நிகழ்ச்சி முதுவேனிற் காலத்தது ஆகலின், அக்காலத்து இளங்காலையும் எற்பாடும் ஒழிந்த ஏனைப் பொழுதெல்லாம் வெயில் மிக்கு வெதுப்பும் இயல்பிற்றே யாதலுங்காண்க!

கோவலன் கொலைப்பட்ட செய்தியைக் குரவை முடிவில் அறிந்து கண்ணகி கதிரவனை விளித்துப் பேசும் நேரம் அவர் கூறுமாறு போல்

"கதிரவன் அடிவானத்தில் தோன்றி உச்சிவானத்தை நோக்கி எழுச்சி கொள்ளும் முற்பகல் நேரம்"

"என்பதை உறுதிப்படுத்திக் கொண்டால் அந்நேரம் கோவலன் பிரிந்து சென்ற நாளினதாக இருத்தல் இயலாது என்பது எளிதாக ஏற்கப்பட்டு, மறு நாளினதே ஆதல் வேண்டும் என்பது வலிவாகக் கொள்ளப்படும் என்று எளிதாக நம்புகின்றார் போலும்!

அதனாலேயே ஆய்ச்சியர் குரவையின் தொடக்கத்தை அதிகாலை நிகழ்ச்சியாகக் காட்ட முனைகின்றார்.

அக் கோட்பாடு 'தன்னைப்பற்றுதல், 'ஒன்றனையொன்று பற்றுதல்' என்னும் ஏரணக் குற்றங்கள் ஆதலை அவர் அறிகிலர்.

அந்தோ, சிவஞானம் அவர்கள் பிழையாக ஒன்றனை நாட்டப் புகுந்து எத்துணை இடர்ப்படுகின்றார்!

## முந்திய நாள் மாலை

> "ஆய்ச்சியர் குரவைக்கூத்து நடத்தி முடித்த தருணத்திலே கோவலன் கொலையுண்ட செய்தி கண்ணகிக்குத் தெரிந்தது என்பதனை,

213
7

'குரவை முடிவிலோர் ஊரரவங் கேட்டு
விரைவோடு வந்தாள் உளள்'

எனக் கூறி, வந்த ஆய்ச்சியானவள்

'அரசுறை கோயில் அணியார் ஞெகிழம்
கரையாமல் வாங்கிய கள்வனும் என்றே
குரை கழன் மாக்கள் கொலைகுறித் தனரே'

என்று சொன்னதாகவும் இளங்கோ கூறுகின்றார். இதனால் ஆய்ச்சியர் குரவை நிகழ்வதற்கு முந்திய நாள் மாலையிலேயே கோவலன் கொலையுண்டு விட்டான் என்பது உறுதிப்படுகின்றது.'' 41

என்று தீட்டுகின்றார் சிவஞானம்.

மேலெடுத்துக் காட்டிய பாடற் பகுதிகளால் குரவைக் கூத்து நடந்து முடிந்த தறுவாயில் கோவலன் கொலையுண்ட செய்தி கண்ணகிக்குத் தெரிந்தது என்பது தான் உறுதிப்படுகின்றதே யன்றிக் குரவை நிகழ்வதற்கு 'முந்திய நாள் மாலையிலேயே கோவலன் கொலையுண்டு விட்டான்' என்பது எவ்வாற்றானும் பெறப்படாமை காண்க!

அவர் அதனைத் தங் கற்பனையால் மாட்டி விடுகின்றமையும் கண்டு கொள்க.

தம் எடுத்துக் காட்டினால் எய்தும் பொருளையும், தாம் தொடுத்து மொழியும் பிறிதொன்றனையும் வேறுபடுத்தி விளங்க உரைக்கும் கூறுபாடறியாத அவர்தம் குழறுபடைகள் இன்னும் பல.

## கண்ணகியின் கலக்கம்

"கோவலன் தன்னைப் பிரிந்து சென்ற நாளில் குரவைக் கூத்து நிகழ்வதற்கு முதல் நாளில்

இரவில் கண்ணகி உள்ளங்குலைந்தாள். மனம் வருந்தி வெதும்பினள் என்பதை,

'காதலற் காண்கிலேன் கலங்கிநோய் கைமிகும்
ஊதுலை தோற்க உயிர்க்குமென் நெஞ்சன்றே
ஊதுலை தோற்க உயிர்க்குமென் நெஞ்சாயின்
ஏதிலார் சொன்ன தெவன்வாழி யோதோழி!

'நன்பகற் போதே நடுக்குநோய் கைமிகும்
அன்பனைக் காணா தலவுமென் நெஞ்சன்றே
அன்பனைக் காணா தலவுமென் நெஞ்சாயின்
மன்பதை சொன்ன தெவன் வாழி யோதோழி!

'தஞ்சமோ தோழி தலைவன் வரக்காணேன்
வஞ்சமோ வுண்டு மயங்குமென் நெஞ்சன்றே
வஞ்சமோ வுண்டு மயங்குமென் நெஞ்சாயின்
எஞ்சலார் சொன்ன தெவன்வாழி யோதோழி!'

என்றெல்லாங் கூறி, கோவலன் கொலையுண்ட செய்தியைத் தெளிவாக அறியுமுன்னரே, அதனை அறிவிக்குநோக்கொடு தன் எதிரேவந்துதிகைத்து நிற்கும் ஆய்ச்சியைப் பார்த்து வாய்விட்டரற்றி அழுகின்றாள் கண்ணகி. இங்கு ஓர் இரவு கோவலன் வரத் தவறியமைக்கு அந்த இரவில் அவளடைந்த மனத்துயரம் அவளாலேயே விளக்கப் படுகின்றதன்றோ?''42

என்று சிலம்புச் செல்வர் வினவுகின்றார்.

மேற்படி பாக்களால் நல்ல பகற்பொழுதிலேயுங் கூடக் கண்ணகி கோவலனைக் காணாது பெரிதும் மனங் கலங்கி வருந்தி, அதனை அப்பொழுதே வெளிப்படுத்திய நிலை புலப்படுவதல்லது, அவர் கூறியாங்கு

முதல் நாளில் இரவில் உள்ளங்குலைந்து வருந்தி வெதும்பினள் என்பதற்கோ, கண்ணகியின் துயரம், 'ஓர்'

இரவு கோவலன் வரத் தவறியமைக்கு அந்த இரவில் அவளடைந்த மனத்துயரம்' என்பதற்கோ ஏதொரு குறிப்பும் இல்லாமையும்.

கைமிகும், உயிர்க்கும், அலவும், மயங்கும் என்னும் வினைகள் நிகழ்காலமே குறித்து, நண்பகற் போதையே பற்றி நிற்றலும் கண்டு கொள்க!

தாஞ் செய்துகொண்ட முடிவிற்கேற்பச் சான்று காட்டி நிறுவுவார் போல் சிவஞானம் கூறுவனவெல்லாம் அளவை முறைக்கு ஒவ்வாத அளப்பு உரைகளே ஆதலறிக!

## உடன்பாடும் முரண்பாடும்

> குரவை முடிவில் ஊர் அரவங் கேட்டு வந்து தன் எதிரே நின்ற மாதரியைப் பார்த்த கண்ணகி, அதற்கு முன்பு கோவலனைப் பற்றிய பயமோ, ஆழ்ந்த வருத்தமோ இல்லாமல் இருந்திருப்பாளாயின், கோவலன் கொலையுண்ட செய்தியை ஆய்ச்சி கூறு முன்னே இவ்வளவு தூரம் அரற்றி அழுதிருக்க மாட்டாள்.
>
> ''நடுக்கு நோய் கைமிகும்' ஊதுலை தோற்க உயிர்க்குமென் நெஞ்சு,' 'அன்பனைக் காணாது அலவுமென் நெஞ்சு' 'மயங்குமென் நெஞ்சு!—என்றெல்லாம் அவள் கூறுவதால், குரவைக் கூத்து நிகழ்வதற்கு முன்பே தன் கணவனுக்கு என்ன கேடு நிகழ்ந்ததோ! என்ற ஐயப்பாட்டில் ஆழ்ந்திருந்தாள் என்பது புலப்படும்,''[43]

என்று தம் கருத்துக்கு வலிவேற்ற முற்படுகிறார் ம. பொ. சி.

நிகழ்வதற்கு முன்னே, என்று மேற்படி பகுதியில் அவர் குறிப்பிடுவது 'முடிவதற்கு முன்னே' என்பது கருதிப் போலும்!

அவ்வாறுயின் அதில் எமக்கு எவ்வகைக் கருத்து வேறுபாடும் இல்லை.

அற்றன்று 'நிகழ்வதற்கு முன்னே' என்றது 'தொடங் தற்கு முன்னே' என்பது கருதியே' என்பராயின் அவ் வாறு கொள்ளுதற்கு ஏற்புறு சான்றில்லை என்பதை மேற் பகுதியில் விளக்கினேம்.

கோவலன் கொலைச் செய்தியை அறியுமுன்னே கண்ணகி அவனைப் பற்றிய அச்சமும் வருத்தமும் கொண் டிருந்தமைக்கும், ஆய்ச்சியைக் கண்ட அளவானே அவள் பலவாறு அரற்றி அழுதமைக்கும் கரணியம் இர விடையிட்ட காலநீட்சியே என்ற ம. பொ. சி. யின் கருத்து எமக்கு உடன்பாடில்லை.

## மனநிலையும் சூழ்நிலையும்

எதிர்வரும் பெருந்தீங்கை முன்னுணர்த்தும் தீக்குறி களுள் இனமறியாத துன்பத் தாக்குதலும் ஒன்றேயாம்.

கற்பென்னும் திண்மையில் ஒப்பற்ற கண்ணகி நல்லாட்கு அத்தகைய துன்பமே தாக்கிற்று என்றல் பிழையாகாது.

கோவலனைப் பிரிந்த நிலையில் இத் துன்பத்திற்கு ஆட்பட்ட கண்ணகி, கோவலன் வரவை நனி விரைவில் எதிர்பார்த்து மேலும் கலக்கமுற்றுள்.

கோவலனைப் பிரிந்து கண்ணகி பல்லாண்டுகள் தனித்திருந்தவளே ஆயினும் அன்றைக்கும் இன்றைக்கும் மனநிலையிலும் சூழ் நிலையிலும் பெருத்த வேறுபாடு அமைந்து கிடக்கின்றது.

கோவலன், எழுக என்ற அளவில் எழுந்து,

குடிமுதற் சுற்றமும் குற்றிளை யோரும்
அடியோர் பாங்கும் ஆயமும் நீங்கி,[44]

அவள் அவன் பின் காவதம் பற்பல கடந்து போந்தது கணவன் சொல்லைக் கடத்தலாகாது என்பதனுன் மட்டும் அன்று; இனி அவனைப் பிரிய விடலாகாது என்னும் வேட்கை பற்றியுமாம் எனினும் பொருந்தும்.

மதுரைக்குப் புறப்படும் முதல் நாளே அவள் கொடியதொரு கனவு கண்டாள். அதன் கொடுமையை அவளே 'கடுக்குமென் நெஞ்சங் கனவினுல்' என்று கூறினுள்.

மதுரைப் புறஞ்சேரியை வந்தடைந்த நேற்றும் விடிய லில் கோவலன் ஒரு கொடுங்கனவு கண்டு நேற்றுச் சாயுங்காலத்தே தான் அவன் அதனை வெளிபடுத்திக் 'கடி தீங்கு உறும்' என்ருன்.

அது கேட்ட கவுந்தியடிகளும் மாடலனும் பாதுகாப் பான இடத்திற்குச் செல்லுமாறு அவர்களை ஆற்றுப்படுத் தினர்; ஆய்ச்சி ஒருத்தியிடம் கண்ணகி அடைக்கலப் படுத்தப்பெற்ருள்.

அதுவரையில் உறுதுணையாய் வந்த கவுந்தியடிகளும் சென்று விட்டார்.

அடைக்கலம் ஏற்று வந்து கடிமனைப் படுத்திய ஆய்ச்சியோ இன்று அதிகாலையில் தீக்குறி கண்டு தீமை 'வருவதொன்று உண்டு' என்று கருதி அது தவிர்க்கத் தெய்வம் பராவ ஏற்பாடு செய்திருக்கின்ருள்.

அவ் ஆயர்சேரியிலுள்ளார் பலரும் உதோ குரவை ஆடிக் கொண்டிருக்கின்றனர்.

புகாரின் நீங்கிய சிறிது தொலைவிலேயே 'மதுரை மூதூர் யாது?'[45] என வினவிய அப் பேதைக்கு இப்

பொழுதைய மனநிலையில் கோவலனைப் பிரிந்த சிறுபொழுதும் பெரும்பொழுதாய் நெடிது தோன்றுதல் இயல்பேயன்றோ?

இத்தகைய சூழலில் கணவனைப் பிரிந்த அவட்கு ஏதோ இன்னதென்று அறியாத துன்ப உணர்ச்சி தாக்குகின்றது.

ஆ! அவ் வேழை மகளின் நிலையை எம்மால் எழுதிக் காட்டவும் முடியுமோ!

கோவலன் வெட்டுப்பட்ட அதே நேரத்தில் கண்ணகியின் மனம் வெடித்துச் சிதறுவது போன்ற துன்ப நடுக்கம் பெற்றிருத்தல் வேண்டும்.

அவளைச் சுட்டிக்காட்டிச் சிற்சிலர் ஏதோ பேசிக் கொண்டது அவளுக்கு அதிர்ச்சியை அளித்திருத்தல் கூடும்.

அதனாலன்றோ அவள் ஆய்ச்சியைக் கண்ட அளவானே பலவாறு தன் துன்ப நிலையைக் கூறி அரற்றி அழுதனள்!

இங்ஙனம் கொள்ளுதல் மனவியல் ஆராய்ச்சியாளர்களின் தொலைவிலுணர்தல் பற்றிய விரிவான ஆராய்ச்சி முடிபுகட்கு ஏற்றதேயாதல் அத்துறை நூல்களில் காண்க!

சிலம்புச் செல்வர் தாம் கொண்டதனை விட்டு விடுதல் ஆகாது என்னும் ஒட்டாரம் இன்றி ஆர அமர யாம் கூறுவதனை எண்ணிப் பார்ப்பின் நன்று.

எமது கருத்து ஒரோவழி அவர்க்கு உடன்பாடு ஆயினும் ஆகலாம்.

## தயிரும் மோரும்

"குரவைக் கூத்து நிகழ்வதற்கு முதல் நாளில் அல்லாமல் அக் கூத்து நிகழ்வதற்குச் சற்று முன்பே கண்ணகி சமைத்துப் படைத்த உணவைக் கோவலன் உண்டுவிட்டுச் சென்ருன் என்பது ஆதாரமற்ற வாதம் ஆகும்." 46

என அடித்துப் பேசித் தமது கூற்றுக்கு ஆதாரங் காட்டப் புகுந்து தயிர்ப் பானையைத் துழாவி,

"ஆய்ச்சியர் இல்லத்தில் கோவலன் உணவு கொண்டான் என்ருல், தயிரோ மோரோ இல்லாமலா உணவை உண்டிருப்பான்?... குடப்பால் உறையாத நிலையில் கோவலன் உண்ணுதற்குத் தயிரோ மோரோ கிடைத்திருக்குமா?" 47

என விஞக்கணை தொடுக்கிருர் ம. பொ. சி.

தயிரோ மோரோ இல்லாவிட்டால் கோவலன் முறுக்கிக் கொண்டு போய்விடுவான் போலும்!

"இடைக்குல மடந்தையர் இயல்பிற் குன்ரு
மடைகலந் தன்ெனொடும் மாண்புடை மரபிற்
கோளிப் பாகற் கொழுங்கனித் திரள்காய்
வாள்வரிக் கொடுங்காய் மாதுளம் பசுங்காய்
மாவின் கனியொடு வாழைத் தீங்கனி
சாலி யரிசி தம்பாற் பயனெடு
கோல்வளை மாதே கொள்கெனக் கொடுப்ப" 48

என்ருர் ஆசிரியர்.

இடைக்குல மடந்தையர் கண்ணகிக்கு மடைக்கலங்களொடும் கோலிப்பாகல் முதல் சாலி யரிசி ஈருன பல வற்றையும் தம் 'பாற் பயனெடு' கொடுத்தனர் என்றமை

யால் அப் பாற்பயன் ஏனையவற்றினும் மேற்பட வைத்துச் சிறப்பித்து உரைக்கப்பட்டுள்ளது.

## பாலும் பயனும்

'பாற்பயன்' என்பதற்கு அருஞ்சொல் உரைகாரர் 'பாலாகிய பயன்' என்று ஒன்றுகப் பொருள் விரித்தார். மற்று அடியார்க்கு நல்லாரோ அதனை உம்மைத்தொகை யாகக் கொண்டு பாலும் நெய்யும் அளித்தனர் என்றுர்.

பாலும் அதன் பயனும் என்பதற்குப் பால், தயிர், மோர், வெண்ணெய், நெய், என்றெல்லாங் கொள்ளலா மேனும் அடியார்க்கு நல்லார்,

'இனி மற்றை நாட் செய்தி கூறுகின்றுர்'.

என்று கூறி, இடைக்குல மடந்தையர் கொடுத்த மையை மறுநாட் காலை நிகழ்ச்சியாகக் கூறுதலானும், அந்நாளில் குடப்பால் உறையாமையால் தயிரும் மோரும் வெண்ணெயும் இல்லாமையானும், முன்னுள் வெண்ணெ யும் உருகியமையானும் அவர் இடைப்பட்ட மூன்றுந் தவிர்த்துப் பாலும் நெய்யுமே கூறினுர் என்பது நுணித்து உணரக் கிடக்கின்றது.

இஃது உணரமாட்டாத பின்னை உரையாசிரியர் களான பெருமழை பொ. வே. சோமசுந்தரனுரும், பிறரும் தயிரென்றும் மோரென்றும் தாம் அறிந்தனவெல்லாம் கூறி நிரப்பி இழுக்கினர். இது நிற்க!

அடியார்க்கு நல்லாரை ஆராயப் புகுந்து பன்னூறு பக்கங்களிற் பலபட விரித்தெழுதிய மூனைவர் ச. வே. சுப் பிரமணியம் அவர்கள், நல்லாரின் நுழைபுல வன்மையைப் புலப்படுத்தி நிற்கும் இன்னேரன்ன இடங்களைக் கண்டு காட்டிலர். அன்றியும் இக் கட்டுரைக்கு நிலைக்களனுன சிக்கலை மற்றவர் வழி நின்று சுட்டிக்காட்டிய அளவில் தாம் பட்டுக்கொள்ளாமலே நழுவிக் கொண்டார்.

"சிலப்பதிகாரக் காப்பிய அமைப்பில் சில செய்திகள் மறைக்கப்பட்டுள்ளன. சில நிகழ்ச்சி கள் முரண்பாடாக அமைகின்றன. துடிப்புள்ள இக்காலத் திறனாய்வாளர்கள் இவற்றை இளங் கோவடிகளின் குறையெனத் துணிந்து கூறுகின் றனர். இதன் விளைவே சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் அவர்களின் 'இளங்கோவடி களின் மறதி' என்ற கட்டுரையும், சிவ மணி கண்டராமனின் ' இளங்கோவின் குறை' என்ற கட்டுரையும்.

"பொதுவாகச் சிலப்பதிகாரக் கதை நிகழ்ச்சி கள் சில முரண்பாடாகவும், குறைபாடாகவும் நமக்குத் தோன்றுகின்றன." 49

"கொலைக்களக்காதை முதல் கட்டுரைக் காதை ஈருகவுள்ள நிகழ்ச்சிகள் அனைத்தும் ஒரு நாள் நிகழ்ச்சியாகக் கொள்ள முடியாதாகினும் அடிகள் ஒருநாள் நிகழ்ச்சி போலக் காட்டிச் செல்கின்றார்." 50

"உரையாசிரியர் மூல நூலாசிரியரிடம் குறை காணும் நோக்குடையரல்லர். மூல நூலார் சொல்லுகின்ற ஒவ்வொரு முறைகட்கும் சில உள் நோக்கம் இருக்கவேண்டும் என உணர்ந்து அந் நோக்கை அறிய முற்படுவர். இந் நிலையில் அடியார்க்கு நல்லார் ஈரிடங்களில் இளங் கோவால் மறைத்துரைக்கப்பட்ட சில செய்தி களை விரித்துரைத்து காப்பிய நிகழ்ச்சியில் முரண் பாடு ஏற்படாமல் காக்கின்றார்." 51

இவ்வாறு கூறி வேறுதொடர்ந்து மேற்செல்கின்றார் முனைவர் ச. வே. சுப்பிரமணியம். இது கிடக்க!

கோவலன் தயிரோ மோரோ இன்றியேதான் உண்டான் என்று அடியார்க்கு நல்லார் கூற்றால் அறியப் படுவதாயிருப்ப ம. பொ. சி. யின் வினா பொருளிலதாய் ஒழியுமாறு காண்க!

## தனிமை நிலைமை

"கருங்கயல் நெடுங்கண் காதலி தன்னை
ஒருங்குடன் தழீஇ உழையோ ரில்லா
ஒருதனி கண்டுதன் உள்ளகம் வெதும்பி" 52

என வரும் கொலைக்களக் காதைப் பகுதிக்கு உரையெழுதப் புகுந்த அடியார்க்கு நல்லார்."

'உழையோர் இல்லா' எனவும், 'ஒரு தனி கண்டு' எனவுங் கூறினர், ஆய்ச்சியரெல்லாம் குரவையாடப் போனமை தோன்ற"55 என்று எழுதியுள்ளார்.

கோவலன் கரிய கயல் போலுங் கண்ணையுடைய தன் காதலியை மெய்ம்முழுதும் தழுவினன் என்றலின் அப்பொழுது அருகில் யாருமிலர் என்பதும், அந்நிலையில் அவனை விட்டுப் பிரியும் அவன் ஆருயிர் மனைவி, அருகில் யாருமின்றித் தனியளாய் இருந்த நிலையை எண்ணியே கண் கலங்கினன் என்பதும் தெளிவு.

ஆங்கு அருகில் இருக்கத் தக்கார் ஆய்ச்சியரே ஆதலானும், அவர்தாமும் இல்லாது தனியளாய் இருந்தமையே அப் பகற்போதிலும் அவளை ஆரத் தழுவுதற்கு வாய்ப்பாய் இருந்தமையானும் அந் நிலையில் ஆய்ச்சியர் யாண்டுச் சென்றிருத்தல் கூடும் என எண்ணிப்பார்த்த அடியார்க்கு நல்லார் "ஆய்ச்சியரெல்லாம் குரவையாடப் போனமை தோன்ற" என்று எழுதியுள்ளார்.

குரவைக் கூத்தும் கொலை நிகழ்ச்சியும் ஒருநாளில் நடந்தன அல்ல என்று ம. பெ. சி. யும் மற்றவர்களும் கொண்ட முடிபிற்கு அடியார்க்கு நல்லார் கூற்று இடையூறாக நிற்றலால், கோவலன் சற்றுமுன்னர்க் 'குடிமுதற் சுற்றமும்' என்பது முதலவாகச் சில கூறிக் கண்ணகியின் நலம் புனைந்துரைத்த அதனையே பின்னும் கருதினன் என்று உரைத்து உழையோர் இல்லா ஒரு தனி நிலையாவது,

> "தாய்—தந்தை, மாமன்—மாமியார், குற்றேவன்
> மகளிர் ஆகிய பழகியோர் இல்லாமையே" 53

என்ற பிறர் ஒருவர் கருத்தையும் கூற்றையும் எடுத்துக் காட்டி, நல்லார் கூற்றை மறுத்துரைக்கின்றார் சிவஞானம்.

அவர் காட்டும் அவ் உழையோர் இல்லா ஒரு தனி நிலை ஈண்டுக் கோவலன் கண்ணகியை ஒருங்குடன் தழுவுதற்கு வாய்ப்பான தனிமை எனல் ஆகாமையின் அவ்வாறு கூறுதல் பொருந்தாமை யறிக!

அன்றியும் 'அவர்கள் தழுவுங்கால் ஆய்ச்சியரும் உடனிருந்தனர் கொல்!' என்னும் நகையாட்டுக்கும் இடனும்,

## பல்தலை வினாக்கள்

தம் 'பிழை' முடிபை வலியுறுத்த மேற்காட்டியாங்குத் தயிர்ப்பானையிலும் தலையிடும் சிலம்புச் செல்வர்,

ஒருநாளில் வெட்டுண்ட உடல் அந்நாள் எச்சப் பொழுதும் இராவும், பின்னாள் முழுதும் கிடத்தல் இயலுமா?

வெட்டிய உடலை அப்படியே விட்டுப் போய் விடுவதுதான் செங்கோல் வேந்தன் தண்டனை முறையா?

ஊரவரும் வாளா இருந்தனரா?

அரசத் தண்டனை என்று கருதி அங்ஙனம் அவர்கள் அமைந்திருப்பினும் காக்கை கழுகு நாய் நரிகளும், ஈ எறும்புகள் முதலாயினவும் எல்லாம் அடங்கி இருந்தனவா?

என்றும், பிறவாறும் பலதலையான் நிகழும் வினைக்களைச் சற்றும் எண்ணிப்பாராது, கோவலன் வெட்டுண்ட மறுநாள் மாலையே கண்ணகி அவனை—அவன் பிணத்தைச் சென்று கண்டாள் என்று கூறுதல் எத்துணைப் பொறுப்பற்ற கூற்று என்பதை எண்ணிப்பார்மின்!

## முடிபு

இதுகாறும் கூறியவாற்ருன் கோவலன் பிரிவும் குரவைக் கூத்தும் ஒருநாள் நிகழ்ச்சிகளேயாம் என்பதும், கோவலன் வெட்டுண்டதும் கண்ணகி அவனைக் கண்டதும் அன்றேயாம் என்பதும், 'வண்டார் இருங்குஞ்சி' என்னும் பாடலில் இடம் பெற்றுள்ள காலையும் மாலையும் ஒருநாளினவேயாம் என்பதும், இப் பாட்டிலோ உரையாசிரியர்களின் கூற்றிலோ 'பிழை' யுமில்லை இளங்கோவடிகட்கு 'மறதி'யும் இல்லை என்பதும், இதுபற்றித் திரு வ சுப. மாணிக்கமும், ம. பொ. சி. யும், மற்றவர்களும் கூறுவன வெல்லாம் பொருந்தாதனவாம் என்பதும் கண்டு கொள்க!

○○○

# காலத் தெளிவு

கோவலன், கண்ணகி, கவுந்தியடிகள் ஆகிய மூவரும் பாண்டிய நாட்டில் செலவு மேற்கொண்டது வெப்பம் மிக்க முதுவேனிற் பருவம் என்பது

" கடுங்கதிர் வேனிலிக் காரிகை பொறாஅள்''[54]

என்பதனாலும், மேற் காடுகாண் காதையில்

" வேனலங் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்
தானலந் திருகத் தன்மையிற் குன்றி
.............................................
பாலை என்பதோர் படிவங் கொள்ளுங்
காலை எய்தினர்"[55]

என்பதனாலும், வேட்டுவ வரியில்

" கடுங்கதிர் திருகலின் நடுங்கஞர் எய்தி''[56]

என்பதனாலும் அறியப்படும். அன்றியும், மேழ(சித்திரை)த் திங்கள் முழுநிலவு நாளில் நடந்த இந்திர விழாவின்போது மாதவியைப் பிரிந்த கோவலன், அடுத்து வந்த தேய்பிறைக் காலம் கடந்து காருவா (அமாவாசை) நாளை யடுத்து வளர்பிறைக் காலத்தில் ஒரு கிழமை சென்றபின்னரே கண்ணகியைச் சென்று கண்டு அவளை அழைத்துக் கொண்டு மதுரைக்குப் புறப்பட்டான். இஃது அவ்விருவரும் வீட்டை விட்டு வெளியேறியது

" வான்கண் விழியா வைகறை யாமத்து
மீன்றிகழ் விசும்பின் வெண்மதி நீங்கக்
காரிருள் நின்ற கடைநாட் கங்குல்"[57]

என்பதனால் அறியப்படும். அறியப்படவே

" காவதம் அல்லது கடவா ராகிப்
பன்னாள் தங்கிச் சென்னாள்"[58]

என்பது கொண்டு அவர்கள் கடந்து வந்த காலத்தைக் கணக்கிட்டுப் பார்த்தலானும், பின்னர் மதுரை எரியுண்டது கடகத் திங்கள் தேய்பிறை எட்டாம் நாள் என்பது அறியப்படுதலானும் தெளியப்படும்.

இரவில் நிலவொளியிற் செலவு செய்தனர் என்பது

" நிலவொளி விளக்கில் நீளிடை மருங்கின்
இரவிடைக் கழிதற்கு ஏதம் இல்லென"[59]

" பின்னையும் அல்லிடைப் பெயர்ந்தனர்"[60]

என்பனவற்றான் அறியப்படும். அவர்கள் புறஞ்சேரியை அடைந்தது வைகறை யாமம் என்பது

" அருந்தெறற் கடவுள் அகன்பெருங் கோயிலும்
.............................................. ...... ...
ஆர்ப்பொலி எதிர்கொள"[61]

என்ற ஓசை வருணனையான் அறியப்படும்.

" ஆடித் திங்கள் பேரிருட் பக்கத்து
அழல்சேர் குட்டத்து அட்டமி ஞான்று
வெள்ளி வாரத்து ஒள்ளெரி யுண்ண
உரைசான் மதுரையோடு அரைசு கேடுறும்"[62]

என்றலின் மதுரை எரியுண்டது கடகத் திங்கள் அழல் விண்மீன் குறையுடைய தேய்பிறை எட்டாம் நாள் வெள்ளிக்கிழமை என்பது வெளிப்படுகின்றது. கண்ணகி வழக்குரைத்ததும், பாண்டியனும் தேவியும் உயிர் துறந்ததும் வெள்ளியன்றே என்பதும் அறியப்படும். கோப்பெருந்தேவி கனவு கண்டது வியாழன் இரவு என்பதும், கண்ணகி கொலைக் களத்தில் கோவலனைக் கண்டது வியாழன் மாலை (முன்னிரவு) என்பதும் புலனும்.

இவ்வாறே நிகழ்ச்சிகளை இயைபுறப் படிப்படியே முறப்படுத்திச் செல்ல அம் மூவரும் புறஞ்சேரியை அடைந்த வைகறை யாமம் செவ்வாய் இரவின் கடைக் கங்குற் பொழுது என்பது புலனாகும்.

## கோவலன் கனவு

மேற்கூறியாங்கு வைகறை யாமத்தின் ஓசைகளைப் பதினன்கு அடிகளில்[61] கூறிப், "புறஞ்சிறை மூதூர்ப் புக்கனர் புரிந்தென்"[63] என்று முடித்த ஆசிரியர் மற்றை நாள் (அறிவன் கிழமை) இளங்காலை ஓசைகளை "புறஞ்சிறைப் பொழிலும்"[64] என்பது முதல் பின்னும் பதினன்கு அடிகளில் விளக்குகின்ருர்.

புறஞ்சேரியை அடைந்த செவ்வாய் இரவின் வைகறை யாமத்தில், அஃதாவது கோவலன் ஊர் காணச் சென்ற அறிவன் கிழமைக் காலைக்கு முற்பட்ட இடை நேரத்தில் அம் மூவரும் வழிநடைச் சோர்வால் அயர்ந்திருந்தினர் என்று கொள்ளக் கிடக்கின்றது.

கன்னியிருள் செறிந்த அவ் வைகறை யாமத்தில் கண்ணயர்ந்திருந்த கோவலன் கனவு கண்டான் என்பது உய்த்துணரக் கிடக்கின்றது.

கோவலன் கனவு பற்றி வேறு வேறு கூறுவாரும் உளர். அவர்தம் கூற்றுகளால் இங்கெடுத்துக் கொண்ட ஆராய்ச்சிக்குத் தாக்குதல் இல்லாமையான் அது பற்றி ஈண்டு விரித்து உரைக்கிலம்.

பகலெல்லாம் (அறிவன் கிழமை) கோவலன் மதுரையில் சுற்றித் திரிந்தனன் என்பது

"... ........................................திரிந்து
விசும்பகடு திருகிய வெங்கதிர் நுழையாப்
பசுங்கொடிப் படாகைப் பந்தர் நீழல்
காவலன் பேரூர் கண்டுமகிழ் வெய்தி"[65]

என்பதனுன் அறியப்படும். கோவலன் மீண்டும் புறஞ்சேரியை அடைந்தது சாயுங்காலம் என்பது அவன் கண்டு வந்த காட்சிகளையும் மாட்சிகளையும் கவுந்தியடிகட்குக் கூறிக்கொண்டிருக்கும் போது அங்கு வந்த மாடலன், கோவலனைக் கண்டுகொண்டு நலம் உசாவினுகை; அவனிடத்துத் தான் கண்ட கனவினைக் கூற; அதுகேட்ட கவுந்தியடிகளும், மாடலனும்

"காதலி தன்னெடு கதிர்செல் வதன்முன்
மாட மதுரை மாநகர் புகுக"[66]

என்றமையானும், அப்பொழுது ஆங்கு வந்து அடைக் கலம் ஏற்ற மாதரி கண்ணகி கோவலரை அழைத்துக் கொண்டு

"சென்ற ஞாயிற்றுச் செல்சுடர் அமையத்து"67

அதாவது கதிரவன் மறைந்து ஒளிமங்கிய நேரத்தே தன் இல்லம் புகுந்தாள் என்றமையானும் அறியப்படும்.

கண்ணகி (வியாழன்) இளங்காலையிலேயே சமையல் செய்தனள் என்பது

"சாவக நோன்பிகள் அடிகள் ஆதலின்
நாத்தூண் நங்கையொடு நாள்வழிப் படூஉம்
அடிசில் ஆக்குதற்கு அமைந்தநற் கலங்கள்
நெடியா தளிமின்"68

என்பதனுன் உய்த்துணரப்படும்.

"செம்பொற் கொடியனையாள் கண்டாளைத் தன்காணுன்
மல்லன்மா ஞாலம் இருளூட்டி மாமலைமேற்
செவ்வென் கதிர்சுருக்கிச் செங்கதிரோன் சென்ருெளிப்பப்
புல்லென் மருண்மாலை"70

"யாருமில் மருண்மாலை"71

என்பனவற்ருன் கண்ணகி கொலைக்களத்தே கோவலனைக் கண்ட நேரம் மாலை நேரம் என்பது விளங்கும்.

இரவு தீக்கனவு கண்ட கோப்பெருந்தேவி அதனை அரசற்குத் தெரிவிக்க வரும் நேரம் அதிகாலையாகவே இருத்தல் வேண்டும் ஆதலானும், தீக்கனவைத் தேவி கூறுவதைக் கூறி "இப்பால்"71 எனத் தொடர்ந்து, கண்ணகி வாயிலோனிடத்துப் பேசுதலை ஆசிரியர் நாடகப் பாங்குற விளக்குதலானும் கண்ணகி வழக்குரைக்க அரண் மனைக்கு வந்ததும் அக் காலைநேரமே என்பது புலனும்.

ஏறத்தாழ நண்பகலிலேயே மதுரை தீயுண்டது என்பது மேற்கூறிய நிகழ்ச்சியான் உய்த்துணரப்படும்.

"அந்தி விழவும் ஆரண ஒதையும்
செந்தீ வேட்டலும் தெய்வம் பராவலும்
மனைவிளக் குறுதலும் மாலை அயர்த்தலும்
வழங்குகுரன் முரசமும் மறைந்த மாநகர்"72

என்றலானும், அதன் பின்னரே இரவில் மதுராபதி தோன்றி அழல் வீடு செய்வித்தமையானும் அற்றைப் பகலும் மாலையும் மதுரை எரிந்தமை பெறப்படும்.

மாதரியம்மை நள்ளிரவே தீப்பாய்ந்தார் என்பது
"தாதெரு மன்றத்து மாதரி எழுந்து

..................................................

இடையிருள் யாமத்து எரியகம் புக்கதும்"[73]

என்றமையான் அறியப்பட்டு அது வெள்ளி இரவே என்பது உய்த்துணரப்படும்.

"வெள்ளியம் பலத்து நள்ளிருட் கிடந்தேன்"[74]

என்றமையான் சாத்தனுர் பற்றிய செய்தி ஒருவாறு அறியப்படும்.

இங்ஙனம் நூற்சான்றுகளால் அறியப்படும் காலக் குறிப்புகளோடு ஏற்றபெற்றி ஏனைய நிகழ்ச்சிகள் இயைபுறுத்தப் பட்டுள்ளமை காண்க!

# குறிப்பு விளக்கம்

(1) சிலப்பதிகாரம்—ஊர் சூழ்வரி—35.
(2) சிலம்பிற் சிறுபிழை—பக். 46-49
(3) சிலப்பதிகாரத்திறனுய்வு—பக். -123.
(4) இரட்டைக் காப்பியங்கள்—பக்-48
(5) செந்தமிழ்ச் செல்வி—சிலம்பு : 50 பரல் .10
(6) சிலப்பதிகாரத்திறன்—பக். 6
(7) சிலம்பிற் சிறு பிழை—பக். 1,2 (அணிந்துரை)
(8) சாகுந்தலம்—பக். 199.
(9) அம்பிகாபதி அமராவதி—பக். 49.
(10) திருக்குறள்—503.
(11) சிலம்பிற் சிறுபிழை—பக். 1-10. (12) ஷை பக். 82.
(13) இரட்டைக் காப்பியங்கள்—பக். 49.
(14) [பக். 18] சிலப். வஞ்சின. 3,4.
(15) [பக். 19] திருக்குறள்—319.
(16) [பக் 19) பழமொழி நானூறு.—46.
(17) சிலம்பிற் சிறுபிழை—பக். 2 (அணிந்துரை)

(18) சிலப். கொலைக். 95. (19) ஷை 95, 96.
(20) சிலப். ஊர்சூழ். 43. (21) சிலப். ஊர்சூழ்.29.
(22) இரட்டைக்காப்பியங்கள்—பக். 43.
(23) சிலப். ஆய்ச். உரைப்.
(24) சிலப். இந்திர. 237–239.
(25) சிலப். கனத். 45–54.
(26) சிலப். அடைக். 95–106.
(27) சிலப். வழக். 9–12.
(28) சிலப். அடைக். 108. (29) சிலப். வழக். 12.
(30) சிலப். கொலைக். 100.
(31) சிலப். ஆய்ச். கருப். (32) ஷை 38–1, 2.
(33) ஷை கருப்.
(34) சிலப். கொலைக். 33, 34. (35) ஷை 36, 63.
(36) சிலப், ஆய்ச். கருப்பம்
(37) சிலப் திறனாய்வு—பக். 133. (38) ஷை பக். 139.
(39) ஷை பக். 129. (40) ஷை பக். 128.
(41) ஷை —பக். 132. (42) ஷை —பக். 135, 136.
(43) ஷை —பக். 136.
(44) சிலப். கொலைக். 84, 85.
(45) சிலப். நாடு. 41.
(46) சிலப்.திறனாய்வு—பக்137. (47) ஷை —பக் 137.
(48) சிலப். கொலைக். 22-28.
(49) அடியார்க்கு நல்லார் உரைத்திறன்—பக் 226
(50) ஷை—பக். 227. (51) ஷை—பக். 227.228.
(52) சிலப். கொலைக். 94–97.
(53) சிலப். திறனாய்வு—பக். 135.
(54) சிலப். புறஞ். 3. (55) ஷை காடு. 62–67.
(56) சிலப். வேட். உரைப் (57) ஷை நாடு. 1-3.
(58) ஷை. 144–145. (59) ஷை புறஞ். 12–13.
(60) ஷை. 136. (61) ஷை 137–150.
(62) ஷை. கட். 133–136 (63) ஷை. புறஞ். 196.
(64) ஷை. ஊர். காண். 1–14. (65) ஷை. 214–217.
(66) ஷை, அடைக். 111-112. (67) ஷை. 203.
(68) ஷை. கொலைக். 18–21. (69) ஷை. ஊர்சூழ்.30-33
(70) ஷை. 44. (71) ஷை. வழக். 23.
(72) ஷை. அழற். 147–150 (73) ஷை. நீர்ப். 74–78.
(74) ஷை. பதிக. 41.

ooo